# கல்கி

KALKI 5.9.93 ரு 3.00



வாஜ்பாய் பேட்டி



"நான் இனி ஆடமாட்டேன்!"

- பிரபு தேவா பேட்டி

參

T H E G I N S E N G H E A L T H

# உங்களால் முடியும்!



நீங்கள் வாலிபத்தில் துள்ளித்திரிந்த அந்த இளமையான நாட்கள் நினைவிருக்கிறதா? ஆம், உடலும் உள்ளமும் முறுக்கேறி இருந்த நாட்கள். அந்நாட்களை திரும்ப பெற வேண்டுமா? உபயோகியுங்கள் **வினோஃபிட் ஜின்செங்***

**வினோஃபிட்-ல்** கொரியாவின் ஜின்செங் மற்றும் இன்றியமையாத மூலிகைச் சாறுகள் சேர்ந்துள்ளதால் உடலின் இரத்த ஓட்டம், ஜீரண சக்தி மற்றும் இன்றியமையாத உறுப்புகளின் செயலாற்றல் மேம்படுத்தப் படுகிறது. மேலும், சோர்வு குறைந்து உடலில் சக்தி அதிகரிக்கிறது.

இதைத்தவிர, **வினோஃபிட்** சருமத்தை எழிலடையச் செய்து, நோய்களை எதிர்க்கும் திறனை உடலிற்கு அளித்து மூளையின் செயலாற்றலை அதிகரிக்கிறது.



* **வினோஃபிட்** ஜின்செங் கேப்சூலும் மற்றும் டானிக் சகல மருந்துக் கடைகளில் கிடைக்கும்.

"வாழ்க்கையை முழுமையாக வாழத் தெரிந்து கொள்ளுங்கள்" என்ற **இலவச வினோஃபிட்** ஜின்செங் பிரசுரத்தைப்பெற கீழ்கண்ட கூப்பனைத் தெளிவாக பெரிய **அச்செழுத்துக்களில்** நிறைவு செய்து தபால் பெட்டி எண் 5581, சென்னை-600 014, என்ற முகவரிக்கு அனுப்பவும்.

(பெரிய அச்செழுத்துக்களில் எழுதவும்)

பெயர்: ..............................

முகவரி: ..............................

..............................

நகரம்: .................... பின்: ..........

KAL/93

**வினோஃபிட்**
**ஜின்செங்**

வோக்ஹார்ட் வழங்கும் தரமான தயாரிப்பு

## வாழ்வில் துடிப்புணர்வுடன் வாழ.

TRITON/93/WL/147 TAM



- வாஜ்பாயி கேட்கிறார்!

# "தேங்காய் உடைப்பவர் தேர்தலுக்கு நிற்கக் கூடாதா?"

**"மார்க்ஸிஸ்ட் கட்சி கொண்டு வந்த ராவ் அரசு மீதான நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தை, நீங்களும் ஆதரித்த போதும், தீர்மானம் தோல்வி அடைந்தது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

''பாரதிய ஜனதா கட்சியைத் தவிர, வேறு எந்த அரசியல் கட்சியும், தேர்தலை விரும்பவில்லை. மார்க்ஸிஸ்ட் கட்சி, நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தாலும் அது, காங்கிரஸின் தலைமை மாற்றத்தைத்தான் விரும்பியதே தவிர, ஆட்சி மாற்றத்தையோ, தேர்தலையோ அல்ல. ஜனநாயக நெறி முறைகளுக்கு முரண்பாடாக, காங்கிரஸ் 'குதிரை வியாபாரத்தில்' இறங்கியது; அ.தி.மு.க.வைப் பிளக்கிற முயற்சியையும் விட்டு விட வில்லை; நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தை ராவ் அரசு தோற்கடித்து விட்டாலும் மக்கள் நம்பிக்கையைக் காங்கிரஸ் இழந்து விட்டது.''

**"காங்கிரஸை ஐந்தாண்டு காலம் ஆள அனுமதிப்பதுதானே நியாயம்?"**

''பஞ்சாப், காஷ்மீர் உட்பட எந்த ஒரு பிரச்னைக்கும் தீர்வு காண்பதில் தீவிரம் காட்டவில்லை; தீர்மானம் எடுக்கவே தயங்குகிறார் ராவ். உள்நாட்டுப் பிரச்னைகளைத் தீர்க்காதது ஒருபுறம் என்றால், அயல்நாட்டு உறவிலும் சுமுகமான நிலைமை இல்லை. காங்கிரஸ் கட்சி மீது நம்பிக்கை வைத்து வோட்டுப் போட்ட மக்கள், இப்போது ஏமாற்றம் அடைந்து விட்டார்கள். எனவே, மீண்டும் தேர்தல் மூலம் மக்களைச் சந்திப்பதுதான் நியாயம்!''

**"பொருளாதாரக் கொள்கைகளில் கொண்டு வரப்பட்ட சீர்திருத்தங்கள், நல்ல பலன் அளித்திருக்கின்றனவே?"**

''பொருளாதார சீர்திருத்தம் என்ற பெயரில் நாட்டின் வெளிநாட்டுக் கடன் சுமை அதிகரித்துக் கொண்டே போகிறது. 1992-93-ல் 76 பில்லியன் ஆக இருந்த அயல் நாட்டுக் கடன், 93-94ல் 80 பில்லியனாகி விட்டது. 1997-98-ல் 91 பில்லியனாக இருக்கும். இரு ஆண்டுகளுக்கு முன் 91-ல் ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் 1775 ரூபாயாக இருந்த அந்நியக் கடன் சுமை, 97-ல் 3440 ரூபாயாக இருக்கும். கண்ணுக்குத் தெரியாமல் ஏறிக் கொண்டிருக்கிறது கடன் சுமை!''

**"மறுபடியும் தேர்தல் நடந்தால், மக்கள் பி.ஜே.பி.க்குத்தான் வோட்டளிப்பார்கள் என்று என்ன நிச்சயம்?"**

''காங்கிரஸுக்கு வாய்ப்பளித்தாகி விட்டது; கூட்டணி ஆட்சிக்கு வாய்ப்பளித்தாகி விட்டது. மக்கள் ஏமாற்றமடைந்து விட்டார்கள். எனவே, காங்கிரஸுக்கு மாற்று என்கிற முறையில், பி.ஜே.பிக்கு வாய்ப்பளிப்போமே என்று மக்கள் நினைக்கிறார்கள்.''

**"ஆனால், சமீபத்திய கருத்துக் கணிப்பு கண்படி, அயோத்தி சம்பவத்துக்குப் பின் இருந்ததை விட, இப்போது பி.ஜே.பி.யின் பாபுலாரிடி குறைந்திருப்பதாகத் தெரிகிறதே?"**

''நான் அவற்றை நம்புவதில்லை.''

**"இனி நன்கொடைகளை செக் மூலமாக வாங்கப் போகிறீர்களே! அதனால் என்ன பலன் ஏற்படும் என்று கருதுகிறீர்கள்?"**

''கறுப்புப் பணம் தேர்தலுக்குப் பயன்படுத்தப்படுவதைத் தடைசெய்ய வேண்டும். அதன் அடிப்படையில்தான் நன்கொடைகளை, செக் மூலமாக வாங்குவது என்று பி.ஜே.பி. முடிவு எடுத்தது. எவரும், கறுப்புப் பணத்தை, செக் மூலம் நன்கொடை தர மாட்டார்களில்லையா? தவிர, வேட்பாளர்களின் தேர்தல் செலவில், அவருக்காகக் கட்சி செலவிடும் தொகையையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்; கட்சிகளின் தேர்தல் செலவுகளுக்கு அரசாங்கமே நிதி உதவி செய்ய வேண்டும் என்பன போன்ற பல தேர்தல் சீர்திருத்தங்களை பி.ஜே.பி. வெகு நாட்களாகவே வற்

புறுத்தி வருகிறது.''

**"கிரிமினல்களிட மிருந்து, அரசியலைப் பிரிக்க வேண்டும் என்று கூறியிருக்கிறீர்கள். சரி. ஆனால், உ.பி.யில் பல பி.ஜே.பி. பிரமுகர்களுக்கு, கிரிமினல் பின்னணி உண்டல்லவா? உதாரணமாய், சென்ற தேர்தலின் போது, முலயம் சிங் யாதவுக்கு எதிரான உங்கள் வேட்பாளர்...''**

''எஸ். அவர் முன்னாள் சம்பல் பள்ளத் தாக்குக் கொள்ளைக்காரர்தான். ஆனால், திருந்தி, ஜெயப்பிரகாஷ் நாராயண் முன்பு சரணடைந்தவர். அவர் மீது இப்போது எந்தக் கிரிமினல் குற்றமும் இல்லையே!''

**"சமீபத்தில் ஒரு பத்திரிகையில் பல் வேறு உ.பி. மாநில பி.ஜே.பி. முக்கியஸ்தர்களின் மீதுள்ள கிரிமினல் வழக்குகள் பற்றி விவரமாய் வெளியிட்டிருந்தார்களே!''**

''நான் அதைப் படிக்கவில்லையே...!'' (அருகில் இருந்த கோவிந்தாச்சார்யாவுடன் இந்தியில் பேசி விட்டு) ''அவற்றில் பல, எங்கள் கட்சிக்காரர்கள் மீது போடப்பட்ட பொய் கேஸ்கள். போலீசாரால் நிரூபிக்க முடியாமல் போனவை!''

**"அயோத்தியில் ராமர் கோவில் கட்ட, அரசாங்கமே முன்வந்திருப்பது குறித்து?''**

''விஸ்வ ஹிந்து பரிஷத் இத்தனை நாள் போராடிச் சாதிக்க நினைத்ததைக் காங்கிரஸ் இப்போது தானே செய்து, பெயர் சம்பாதித்துக் கொள்ள நினைப்பது நியாயம் இல்லை.''

**"வி.ஹெச்.பி.தான் இப்போது தடை செய்யப்பட்டு விட்டதே!''**

''போராடியது வி.ஹெச்.பி. என்றாலும், ராமர் கோவிலைக் கட்டும் பணி, அதற்கான சாதுக்கள் அடங்கிய டிரஸ்ட்டிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்பது தான் எங்கள் நிலை.''

**"மதத்தையும், அரசியலையும் பிரிப்பது நல்ல முயற்சிதானே?''**

''அரசியலை, ஜாதி, மதம், இனம், மொழி இவைகளிலிருந்து பிரிக்கலாம். ஆனால், காங்கிரஸின் தற்போதைய முயற்சி, பி.ஜே.பியை தேர்தலில் பங்கு பெறச் செய்வதிலிருந்து தடுக்கும் ஒன்று தான். காங்கிரஸ் கொண்டு வரவிருக்கும் சட்டத்தில், ஒருவர் தேங்காய் உடைத்து பூஜையுடன் தமது தேர்தல் பணியை ஆரம்பித்தால் கூட அதையே மதச் சார்பான காரியம் என்று காரணம் காட்டி, அவரைத் தேர்தலில் பங்குகொள்ள முடியாமல் தடை செய்து விட முடியும். இது ஜனநாயகத்துக்கும் மக்களின் அடிப்படை உரிமைகளுக்கும் முரணானது. இந்தச் சட்டம் குறித்து தேர்தல் கமிஷனின் கருத்து என்ன என்று கேட்க வேண்டும் என்ற எங்கள் யோசனையைக் கூட காங்கிரஸ் காதில் போட்டுக் கொள்ளவில்லை.''

**"அரசியலிலிருந்து, மதத்தைப் பிரிக்கும் சட்டத்தைக் காங்கிரஸால் நிறைவேற்றி விட முடியுமா?''**

''அது அத்தனை சுலபமில்லை. பி.ஜே.பி. தவிர, ஜார்ஜ் பெர்னாண்டஸ் போன்ற எதிர்க்கட்சித் தலைவர்களும் இதனைக் கடுமையாய்ச் சாடி இருக்கிறார்கள். காங்கிரஸ்காரர்களுக்குள்ளேயே இது குறித்து மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன. ஒருவேளை மக்களவையில் நிறைவேற்றப் பட்டு விட்டாலும் கூட, மாநிலங்கள் அவையில் சிக்கல் வரும். அங்கே காங்கிரசுக்கு மூன்றில் இரண்டு பங்கு பலம் இல்லை.''

**"அயோத்தி சம்பவத்தின் எதிரொலி தான் பம்பாய், கல்கத்தா, சென்னை குண்டு வெடிப்புகள் என்று சொல்லப்படுகிறதே!''**

''அயோத்தி சம்பவத்துக்கு முன்னதாகவே ஆர்.டி.எக்ஸ். வகை வெடிமருந்து இந்தியாவுக்கு வந்து விட்டதாகப் புலன் விசாரணைச் செய்திகள் தெரிவிக்கின்றனவே. சமீபத்தில் உ.பி.யில் ஒரு மசூதியில் நடந்த குண்டுவெடிப்பு பற்றி விசாரணை செய்த போது, கல்கத்தாவைச் சேர்ந்த ஒருவர், வெடிமருந்து சப்ளை செய்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டது. பாரபட்சமின்றி, நுணுக்கமாய் ஆராய்ந்து, உண்மைகளை வெளிக்கொண்டு வர வேண்டும்.''

**"அயோத்தி சம்பவத்துக்குப் பின், கட்சியில் தீவிரவாதப் போக்குடையவர்களின் கை ஓங்கி, உங்களைப் போன்ற மிதவாதிகள் சற்று ஓரம் கட்டப்பட்டு விட்டது போலத் தோன்றுகிறதே!''**

''அது உண்மையானால் உங்களுக்குப் பேட்டி தரவே நான் ஒப்புக் கொண்டிருக்க முடியாதே!'' என்று பலமாய்ச் சிரிக்கிறார் வாஜ்பாயி.

**டெயில்பீஸ் :** பிரம்மச்சாரியான வாஜ்பாயிக்கு நல்ல நகைச்சுவை உணர்வு. ஒருமுறை டெல்லி விமான நிலையத்தில், இவரை மெட்டல் டிடெக்டர் மூலம் சோதனை செய்த பாது காப்பு அதிகாரியிடம், ''எதற்காக இந்தச் சோதனை?'' என்று வாஜ்பாயி கேட்க, ''விமானத்தைக் கடத்திக் கொண்டு போகும் எண்ணத்துடன் ஆயுதம் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கத்தான்'' என்று அந்த அதிகாரி பதில் சொன்னாராம். உடனே பட்டென்று வாஜ்பாயி அடித்த கமெண்ட் : ''இத்தனை வயசாகியும், ஒரு பெண்ணை ஹைஜாக் பண்ணிக் கொண்டு போய்க் கல்யாணம் செய்து கொள்ளத் துப்பில்லாத நானா, விமானத்தைக் கடத்திக் கொண்டு போவேன்?''

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி

படம் : ஸ்டுடியோ கீதாஞ்சலி



**உர வினியோகம் :**

# ஷெண்ணளாஷெய ஊழல்!

நெல்லியாலம் என்ற கோட்டத்தில் உர மூட்டைகளை இறக்கி அடுக்குகையில் யதேச்சையாக ஒரு மூட்டையைப் பிரித்துப் பார்த்த தொழிலாளர்கள் அதில் யூரியாவுக்குப் பதில் வேறு ஏதோ இருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்திருக்கிறார்கள். அனைத்து மூட்டைகளும் அதே நிலையில் இருக்க, மேலதிகாரி அனந்தசாமி (Group Manager) விடம் புகார் செய்தார்கள். நடந்திருக்கும் ஏமாற்று வேலையை உணர்ந்து, உடனே 'மாதிரி' யூரியா எடுக்கப்பட்டு, கோயமுத்தூரில் இருக்கும் உரப் பரிசோதனை நிலையத்திற்கு அவரால் ஆய்வுக்கு அனுப்பப்பட்டது. ஆய்வில் அது யூரியா அல்ல என்பதும் படிகாரக் கற்கள் தூள் செய்து அனுப்பப்பட்டிருப்பதும் நிரூபணமானது. அதற்குள் ஓரிரு கோட்டங்களில் பாதிக்கும் மேற்பட்ட உரங்கள் பயன்படுத்தப்பட்டு விட்டாலும் பெரும்பாலான கோட்டங்களில் அப்படியே நிறுத்தி வைக்கப்பட்டு விட்டது.

எங்கே நடந்தது இந்த உர ஊழல்?

இலங்கையிலிருந்து தாயகம் திரும்பிய தமிழர்களின் மறுவாழ்வுக்காகவும், மண் சரிவினைத் தடுக்கும் நோக்கத்துடனும், 1969 ஆம் ஆண்டு அரசு திட்டத்தின் கீழ் நீலகிரி மாவட்டத்தின் மலைச் சரிவுகளில் தேயிலைத் தோட்டங்கள் உருவாக்கப்பட்டன. இத் திட்டம் லாபம் தரக்கூடிய தனி நிறுவனமாக (TANTEA) 1974-ல் மாற்றியமைக்கப்பட்டது. அதன்படி ஒன்பது கோட்டங்களை உள்ளடக்கி TANTEA நிறுவனம் செயல்பட்டு வருகிறது. ஒவ்வொரு கோட்டத்திலும் சராசரி ஆயிரம் ஏக்கர் வீதம் ஏறத்தாழ ஒன்பதாயிரம் ஏக்கர் பரப்பளவில் தேயிலை பயிரிடப்படுகிறது. இங்கு பணிபுரியும் மொத்த தொழிலாளர்களின் எண்ணிக்கை சுமார் 20,000.

மேற்கூறிய தேயிலைத் தோட்டங்களுக்கு இவ்வருடம் அரசு உரம் வழங்கிய விஷயத்தில்தான் ஊழல் நடந்ததாகச் செய்தி. கூடலூரிலிருக்கும் ஏ.ஐ.டி.யூ.ஸியின் தோட்டத் தொழிலாளர்கள் சங்கத்தின் செயலாளர் பாலகிருஷ்ணனைச் சந்தித்துப் பேசியதில் சில விவரங்கள் தெரிய வந்துள்ளன.

வருடத்திற்கு நான்கு முறை அனைத்து தேயிலைத் தோட்டங்களுக்கும் உரம்

பெங்களூர் ரிப்போர்ட் :

# 'மொய்லி இன்லில்; காங்கிரஸ் உள்ஸில்!'

நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தில் நரசிம்மராவ் தப்பிப்பாரா, மாட்டாரா என்ற சஸ்பென்ஸில் கொஞ்ச நாட்கள் சும்மா இருந்த கர்நாடக காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள், மத்திய அரசாங்கம் பிழைத்து விட்டது என்ற செய்தி வந்த அடுத்தநாளே, விட்ட இடத்திலிருந்து தங்கள் பணியை ஆரம்பித்து விட்டனர். பணி : மொய்லிக்கு எதிராக அணி திரள்வது!

மொய்லியின் எதிர்ப்பாளர்களுக்கு நோக்கம் ஒன்றுதான். எப்படியாவது அவரை இறக்கி விட்டு, எஸ்.எம். கிருஷ்ணா முதல்வரானால் அவர் மந்திரி சபையில் ஒருநாள் மந்திரியாகவாவது இருந்து விட்டுப் போய் விடலாம்.

திரைமறைவு வேலைகளாக எஸ்.எம். கிருஷ்ணா வீட்டிலும் ராஜசேகரமூர்த்தி வீட்டிலும் 'லஞ்ச்' சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு சில எம்.எல்.ஏக்களின் தொகை வீரப்பமொய்லி சமீபத்தில் வாரியங்களுக்கான தலைவர்களின் பெயர்களை அறிவித்து முடித்ததும் திடீரென்று உயர்ந்தது. லிஸ்டில் பெயர்வரும் என்று எதிர்பார்த்து ஏமாந்தவர்கள் கணிசமான அளவில் 'லஞ்ச்' சாப்பிட வந்து விட்டார்கள். இத்தனை கூட்டத்தை எஸ்.எம். கிருஷ்ணாவே எதிர்பார்க்கவில்லை!



• தேஷ்பாண்டே



• எஸ்.எம். கிருஷ்ணா

இவ்வளவு பேர் சேர்ந்ததும் இவர்களையெல்லாம் டெல்லிக்குக் கூட்டிச் சென்று பலத்தை நிரூபித்து விட்டு வர வேண்டும் என்ற திட்டம் உருவானது. தனியார் விமானத்தில் டிக்கெட்டுகள் ஏற்பாடு செய்யப் பட்டு, நாற்பதுக்கும் மேற்பட்ட எம்.எல்.ஏ.க்கள் டெல்லி போனார்கள்.

விஷயம் கேள்விப்பட்டு, கர்நாடக மாநிலத்தில் சுற்றுப் பயணத்தில் இருந்த முதல்வர் மொய்லியும் டெல்லிக்குப் பறந்தார். எதிர்ப்பாளர்களையும் முந்திக் கொண்டு பிரதமரையும் மற்ற தலைவர்களையும் சந்தித்து, தமக்கு எதிர்ப்பாளர்கள் கொடுத்து வரும் தொல்லைகளைப் பற்றி எடுத்துரைத் தார். நரசிம்மராவிடம் மொய்லி பேசிய போது முக்கியமான ஒரு கோரிக்கையையும் வைத்தார் என்று

---

(யூரியா) போடப்படுகிறது. இவற்றைச் சென்னையில் இருக்கும் திருவள்ளூர் பல நோக்குக் கூட்டுறவு சங்கத்திலிருந்து கொள் முதல் செய்து டான்ஃபீ நிறுவனத்திற்கு வழங்க, கோவை மாவட்டம் மேட்டுப் பாளையத்தைச் சேர்ந்த ஒருவர் ஏஜெண்டாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

இந்த வருடம் மே மாத தவணையில் வர வேண்டிய உரம் ஜூலையில்தான் வந்தது. வழக்கமாக தலைமை அலுவலகமான குன் னூரில் உள்ள ஆய்வுக் கூடத்தில் உரம் பரி சோதிக்கப்பட்டு, அதன் தரம் ஏற்றுக் கொள் ளக்கூடியதாக இருந்தால் மட்டுமே அனைத்து கோட்டத்திற்கும் வினியோ கிக்கப்படும். ஆனால் சமீப காலங்களாக பரிசோதனைக்கு உட்படுத்தப்படாமலேயே வினியோகிக்கப்பட்டு வருகின்றது.

விஷயம் வெளியே தெரிந்து விடவே வேறு வழியின்றி ஏஜெண்ட் மூலமாகத் திரு வள்ளூர் கூட்டுறவுச் சங்கத்திற்கு டான்டீ நிறுவனம் தகவல் தெரிவித்து, வினியோ கித்த யூரியாவை(?) திரும்ப எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டுள்ளது. கூட்டுறவுச் சங்கமும் ஒப்புக் கொண்டு, மாற்று உரம் அனுப்பி வைப்பதாகக் கூறி யுள்ளது. சரியான நேரத்தில் உரம் போடப் படாததால் பச்சைத் தேயிலையின் மொத்த விளைச்சலில் கணிசமான அளவு (கிட்டத்



◆ மொய்லி

சொல்லப்படுகிறது. அதாவது - 'எதிர்ப்பாளர்கள் மீது நடவடிக்கை எடுப்பதற்கான அதிகாரத்தை நீங்கள் தராவிட்டாலும் போகிறது. இம்மாதிரியான எதிர்ப்பு நடவடிக்கைகள் மேலிடத்திற்குப் பிடிக்கவில்லை என்பதை உணர்த்தும் விதமாக உங்களைச் சந்திக்க வந்திருக்கும் எம்.எல்.ஏ.க்களைச் சந்திக்காமல் தவிர்த்து விடுங்கள். அப்போதுதான் இம்மாதிரியான போக்குகள் குறையும்... அரசாங்கத்தையும் கட்சியையும் ஒழுங்காக நடத்த முடியும்'. மொய்லியின் கோரிக்கையை ஒப்புக் கொண்டது போல் பதில் சொல்லி மொய்லியை அனுப்பிய ராவ், எதிர்ப்பாளர்களையும் சந்தித்து அனுப்பி வைத்திருக்கிறார். பிரதமரைச் சந்தித்ததே தங்களுக்குக் கிடைத்த 'மாரல் சப்போர்ட்' - என்பதாக நினைத்த எதிர்ப்பாளர்கள் பெங்களூர் திரும்பியதும் இன்னமும் தீவிரமாய் ஆதரவு திரட்ட ஆரம்பித்து விட்டனர்.

மொய்லிக்கு எதிரான நடவடிக்கைகளில் இத்தனை நாட்களும் நேரடியாக ஈடுபடாமல் இருந்த எஸ்.எம். கிருஷ்ணா பெங்களூர் அரண்மனை மைதானத்தில் நடந்த எம்.எல்.ஏக்கள் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினார். ''மொய்லி இளிஸி; காங்கிரஸ் உளிஸி'' (''மொய்லியை இறக்குங்கள்; காங்கிரஸைக் காப்பாற்றுங்கள்'') - என்ற கோஷம் அறிவிக்கப்பட்டது.

''இன்னமும் இது எங்கள் குடும்பத் தகராறு என்று சொல்லி காங்கிரஸ்காரர்கள் மக்களை ஏமாற்ற முடியாது. பூனையும் நாயும் போல தெருவில் இறங்கிச் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதுவா குடும்பத் தகராறு?'' - என்கிறார் சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் தேஷ்பாண்டே. ''ஒன்று மொய்லி ஒழுங்காக ஆட்சி செய்யட்டும். இல்லாவிட்டால் ராஜினாமா செய்து விட்டுப் போகட்டும்'' - என்கிறார் அவர்.

பொது மக்களைப் பொறுத்த வரை அவர்களின் கோபமெல்லாம் நரசிம்மராவ் மீதுதான். ''ஒரு கட்டுப்பாடு என்பதே இல்லாமல் இதெல்லாம் என்ன? எதிர்ப்பாளர்களை எதற்காக ஊக்குவிக்க வேண்டும்? இன்னொரு முதல்வரை மட்டும் மாற்றினார்களென்றால் இனிமேல் காங்கிரஸ் தலையெடுக்கவே முடியாது'' - என்கிறார்கள் அவர்கள்.

- அமுதவன்

---

தட்ட 70 லட்சம் கிலோ) குறைந்திருப்பதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது.

இதற்கிடையில் அந்த ஏஜெண்ட் நேரடியாக வந்து சம்பந்தப்பட்ட அதிகாரியை (அனந்தசாமி) 'இந்த விஷயத்தில் மேலும் தீவிர அக்கறை காட்ட வேண்டாமென்றும் இல்லையெனில் பின்விளைவுகளைச் சந்திக்க வேண்டுமென்றும்' மிரட்டிச் சென்றிருக்கிறார். அதிகாரி பணியாமல் போகவே, அதன் விளைவாகச் சில தினங்களில் அவருக்கு மதுரைக்கு மாற்றல் உத்தரவு வந்தது! குரூப் மானேஜர் பதவி இன்று வரை நிரப்பப்படவில்லை! இதிலிருந்தே ஊழல்களில் அமைச்சர் அளவில் கூட அரசியல் தொடர்புகள் இருப்பதாக ஊகிக்கலாம்.

இது மட்டுமில்லாது, Washing Chemicals, சணல் பை, சிமெண்ட் என பலவித பொருட்களின் கொள்முதலிலும் லட்சக்கணக்கில் ஊழல் நடந்திருப்பது தெரியவந்துள்ளது. இவை அனைத்திலுமே அந்த ஏஜெண்ட் தொடர்பு கொண்டிருப்பதாகவும் தெரிகிறது. இவருக்கு உடந்தையாக டான்டீ நிறுவனத்தின் சில உயர்மட்ட அதிகாரிகளும் மாநில அரசியல் பிரமுகர்களும் செயல்பட்டிருக்கிறார்கள் என்பது இந் நிறுவன தொழிலாளர்களின் ஒருமித்த கருத்து!

- உதாதிபன்



# உடன்பிறப்பு

அனாதைச் சிறுவர்கள் இரண்டு பேர் அண்ணன் தம்பி மாதிரி பழகுகிறார்கள். (ராம லட்சுமணர் மாதிரி இருக்கிறார்கள் என்பதைக் காட்ட அடிக்கடி ஒரு கோடு போட்டு 'நீ இதைத் தாண்டக் கூடாது' என்று நீளநீள வசனங்களில் செமை படுத்தல்.)

லட்சுமணருக்கு மனைவியாகக் கைகேயியும், மாமனாராகச் சகுனியும் வாய்த்தால் எப்படி இருக்கும் என்கிற மகத்தான கற்பனையின் விளைவு நண்பர்களிடையே பிளவு, அடிதடி, ஆயுதக் கடத்தல் கும்பல், புறம்போக்கு நில வளைப்பு இன்னபிற வாகயிலங்கள். நடுநடுவே மறக்காமல் 'அம்மா' செண்ட்டிமெண்ட்ஸ்.

கல்யாணம் ஆகாத தாபத்தில் சுகன்யா விதவைக் கோலம் பூணுவது, தன் புருஷன் எப்போதும் நண்பனையே நினைத்து உருகுவது கண்டு கஸ்தூரி, கோபத்தோடு வழிவது எல்லாம்... வக்கிரமே உன் பெயர்தான் வாசுவா?

சத்தியராஜுக்கு இப்படி ஒரு கதி வர வேண்டாம். அநியாய வேஸ்ட்! முதல் பாதி முழுக்க 'நண்பா நண்பா' என்று உருகி, இடையில் கிடைக்கிற சுகன்யா நாலஞ்சு சீன்களுக்குள் செத்துப்போக, மறக்காமல் ஒரு தத்துவப் பாடல் பாடி, கேவலன் கேவலனாகக் கண்ணீர் விட்டு, நாலஞ்சு சண்டை போட்டு, அதற்கு மேலும் தாக்குப் பிடிக்க முடியாமல் மண்டையைப் போட்டு... கடவுளே!

படத்தில் யார்யாரோ வருகிறார்கள். என்னென்னவோ பேசுகிறார்கள். ஒன்றும் ஒட்டுகிறபடியே இல்லை. குறுக்கே 'கோடு' போட்டு சத்தியராஜும் ரகுமானும் சண்டை போடுகிற சீனில் 'இருதுருவம்' என்று போஸ்டர் காட்டுவதோடு தன் பணி முடிந்து விட்டதாக டைரக்டர் கருதிவிட்டார் போலும்.

ஸாரி, வெரி ஸாரி!

---

கிராமத்து அரவிந்தசாமி ஷோக்காகத்தான் இருக்கிறார். அந்தப் பால்முகம் காட்டுகிற வெட்கம், குறும்பு - எந்த ஒரு நடிகைக்கும் கூட சாத்தியமில்லாத ஒன்று.

ஜோடி இல்லாத சுகன்யா கொஞ்சம் வித்தியாசம். எம்.பி.பி.எஸ். படித்து விட்டு, கதை எழுதுவதாக கப்ஸா விட்டுக் கொண்டு அவர் ஏன் அந்தக் கிராமத்துக்கு வருகிறார்? பிடித்து வைத்த பிள்ளையாராட்டம் அவர் உயிரோடிருக்க, பேப்பரில் ஏன் முதலாண்டு நினைவஞ்சலி வருகிறது? அவரது ரிஷி மூலத் தேடல் கிளைமாக்ஸ் வரை சஸ்பென்ஸ்ஸாக்கப்பட்டிருப்பது சாதனை.



வேப்பிலை அடித்து வைத்தியம் பார்த்துச் சாகடிக்கும் கிராமத்து வைத்தியர், ஊருக்கு வழி கேட்டால் ஒன்றுக் கடித்து ரூட் போடும் அரை டிராயர், அரசமரத்தடி அரட்டை கும்பல், புதுசாக நுழைகிற பிராணியை உரசிப் பார்த்து எடை போடும் பெரியாத்தா... மூக்கு நிறைய மண் வாசனை. பாரதிராஜாவுக்குப் பின் ஒரு நிஜ கிராம டைரக்டர்.

சிவரஞ்சனியிடம் இந்தத் துள்ளலா? கடச்கட இஞ்சிச் சாறு குடித்தாற்போல அத்தனை உரைப்பு. ஆனால் புடைவையெல்லாம் அவருக்குச் சரிப்படவேயில்லை. என்னவோ கொலு பொம்மைக்கு கோணிப் பை சுற்றினாற்போல!

ஆற்றங்கரைப் பெண்களிடம் மன்சூர் வம்பு பண்ண, அங்கு அரவிந்தசாமியும் ஆஜராகி விட, வசமான ஒரு சண்டைக் காட்சிக்கு நம்மைத் தயார்ப்படுத்திக் கொள்கிற வேளையில், வெகு சாமர்த்தியமாய் அதைத் தவிர்த்திருக்கிற விதம் பார்த்து நம்மை விழி உயர்த்த வைத்த டைரக்டர், கிளைமாக்ஸில் அத்தனை ரௌத்ரம் காட்டியிருக்க வேண்டாம். இருப்பினும் கதை நெடுகக் கலந்திருக்கும் கவிதைத் தன்மை சகலத்தையும் மறக்கடித்து விடுகிறது. (கவுண்டமணி, செந்தில் 'நாய்க்கடி' தவிர.)

ஒரே ஒரு குறை. தாலாட்ட வேண்டியவர் தூங்கி விட்டிருக்கிறார்.

இளையராஜா!

# தாலாட்டு

- ஆர்.பி.ஆர்.



# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம்:1990
பதிவு அலுவலகம்:60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதரிப்பேட்டை, சென்னை-600 002.
கிளை அலுவலகம்:36, ஜீனிஸ் ரோடு, சென்னை-600 015.

### பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | ✱5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும் உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

### காமதேனு மணி பேக் திட்டம்

| வைப்புத்தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ.6,320/- | ரூ.6,000/- | ரூ.6,000/- | ரூ.56,320/- |
| ரூ.12,640/- | ரூ.12,000/- | ரூ.12,000/- | ரூ.1,12,640/- |
| ரூ.25,280/- | ரூ.24,000/- | ரூ.24,000/- | ரூ.2,25,280/- |
| ரூ.50,560/- | ரூ.48,000/- | ரூ.48,000/- | ரூ.4,50,560/- |

### பொற்குவியல் திட்டம்

ரூ.100 மட்டுமே பிரதி மாதம் செலுத்தி 25 வருட முடிவில் ரூ.3,00,000 பெறுவீர்!

### பென்ஷனர் நலத்திட்டம்

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்

| | | |
|---|---|---|
| ரூ.10,000/-மும் அதற்கு மேலும் | 12 மாதங்கள் | வட்டி 19.5% |
| ரூ.10,000/-க்கு கீழ் | | வட்டி 16.5% |

### ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

மாதம் ஒன்றுக்கு ரூ.25-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்

| மாதம் | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 80 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,060 | 13,400 | 17,500 |

### செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா இதோ
ரூ.7500ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,25,000 பெறலாம்
ரூ.9000 ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,50,000 பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

### கடன்

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்.
சென்னை மாநகரில் உள்ள கட்டிடங்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விதம் ரூ.1.85

(Friday Weekly Holiday)
பங்குதாரர்களுக்கு மட்டும்
*Business Hours*
*Week Days 9 A.M. - 12 Noon &*
*2.30 P.M. - 6.00 P.M.*

சேர்மன் P. பாலசுப்பிரமணியம் B.Sc.
*சீனியர் டிரஸ்டி*
*ஸ்ரீ கந்தகோட்டம்*
*சென்னை-3.*

பாதுகாப்புப் பெட்டக வசதி உண்டு

SURESH

*பிரபு தேவா - சமீபகால சினிமாக்களில் ஆடல் புரட்சி யாளர். வெள்ளித் திரையில் தமது அசைவுகளில் ஜிம்னாஸ்டிக் காட்டுகிறவர். அநேக அநேக கல்லூரி மாணவ - மாணவியரின் கனவுக் கதா நாயகன். அந்த நாடிக்குள்தான் ஏதோ 'ரூ மந்திரக் காளி' வைத்திருக் கிறாரோ என்று எண்ணுகிறபடி அடிக்கடி தொட்டுப் பார்த்துக் கொள் கிறார். ஒடிசலான உடம்பை சோபா வுக்குள் இடுக்கிக் கொண்டு, தமக்கு மட்டும் கேட்கிற மாதிரி பேசுகிறார். பாதிப் பேச்சை வெட்கமும் மீதியைச் சிரிப்பும் விழுங்கி விடுகிறது. நமக்கு மட்டும் காப்பி, ஜூஸ் என்று தந்து விட்டு அவர் சுலபமாக ஜகா வாங்கி விடுகிறார். (''காப்பி, டீ, ஜூஸ், கூல் டிரிங்க்ஸ் எதுவும் பழக்கமில்லை''.) இனி, அவரோடு நீங்கள்!*

**திடீர்னு 'நான்தான் பிரபுதேவா'ன்னு ஒருநாள் சினிமாவுல குதிச்சிட்டீங்க. இவ்ளோ பெரிய ஆளா வருவோம்னு ஆரம்பத்துல நினைச்சீங்களா?**

ஆசை இருந்தது. உலகம் முழுக்க பேசப்படற டான்ஸரா வரணும்னு சின்ன வயசுலயே நினைச்சேன். அதுக்காக நான் முழுக்க பிராக்டிஸ் பண்ணேன், இன்னும் பண்ணிக்கிட்டிருக்கேன். இப்பத் தானே ஸ்டேட் லெவல்ல தெரிய ஆரம்பிச்சிருக்கேன்? இன்னும் இருக்கு!

**எந்த வயசுல ஆட ஆரம்பிச்சீங்க?**

சரியா ஞாபகமில்லை. ஆனா, ரொம்பச் சின்ன வயசுலயே ஆரம்பிச்சுட்டேன். முறைப்படி டான்ஸ் கத்துக்க ஆரம்பிச்சது பதிமூணு வயசுலதான். பரதநாட்டியம் தெரியும். பிரேக், டிஸ்கோ இந்த மாதிரி வெஸ்டர்ன் டான்ஸெல்லாம் எங்கப்பாகிட்டதான் கத்துக்கிட்டேன்.

**முறைப்படி கத்துக்கிட்ட டான்ஸைத்தான் இப்ப ஆடறீங்களா?**

நிச்சயமா இல்லே! நான் ஆடற டான்ஸை இன்ன வகைன்னு பிரிக்கறதே கஷ்டம். ஒரு சமயம் எல்லாம் கலந்து ஆடறாப்ல



தெரியும். இன்னொரு சமயம் எந்த சாய ஓரமே இல்லாம இருக்கும். கத்துக்கறதுங் கறது ஓர் அடிப்படை நாலெட்ஜுக்காகத் தான். அதை அப்படியே ஆடினா ரசிக்காது. கிரியேட்டிவிட்டி ரொம்ப முக்கியம். என் னோட அசைவுகளை நானேதான் உருவாக்க றேன்.

**அந்த வகைல யாரையாவது பின்பற்று கிறீர்களா?**

இப்போ இல்லை. ஆரம்ப காலத்துல மைக்கேல் ஜாக்ஸன் மேல ஒரு மாதிரி பிரமை இருந்தது. அவர் மாதிரி ஆடணும்னு நினைச்சேன். 'டெக்'ல போட்டுப் பார்த்து பிராக்டிஸ் பண்ணுவேன். போகப் போக, ''நாம எதுக்கு அவரைப் பின்பற்றணும், நம்மை நாலு பேர் பின்பற்றுகிற மாதிரி வரணும்'னு தோணிச்சு. அப்பலேர்ந்து யாரையும் ஃபாலோ பண்றதில்லை. தப்போ, சரியோ நான் ஆடறதுதான் என் ஸ்டைல்.

**உங்கப்பா (சுந்தரம் மாஸ்டர்) சினிமால இருக்கார் என்பதால் நீங்களும் சினிமாவுக்கு வந்தீங்களா? அல்லது...**

சினிமாவுக்காக நான் டான்ஸ் ஆடற தில்லை. என் டான்ஸ் திறமையை வெளிக்



"ஆரம்ப காலத்துல மைக்கேல் ஜாக்ஸன் மேல ஒரு மாதிரி பிரமை இருந்தது. அவர் மாதிரி ஆடணும்னு நினைச்சேன். 'டெக்'ல போட்டுப் பார்த்து பிராக்டிஸ் பண்ணுவேன். போகப் போக, ''நாம எதுக்கு அவரைப் பின்பற்றணும், நம்மை நாலு பேர் பின்பற்றுகிற மாதிரி வரணும்'னு தோணிச்சு."

# இனி ஆடமாட்டேன்!"

காட்ட நான் சினிமாவைப் பயன்படுத்திக்க றேன். அவ்வளவுதான். தவிர நான் ஆடறது ரெண்டாம்பட்சம். 100 படங்களுக்கு மேல நான் டான்ஸ் மாஸ்டரா வேலை பார்த் திருக்கேன். ரஜினிகாந்த்லேர்ந்து, கமல் ஹாஸனிலிருந்து, சிரஞ்சீவியிலிருந்து ஒருத் தர் பாக்கி இல்லாம எல்லாருக்கும் நான் கம்போஸ் பண்ணியிருக்கேன். நான் ஆட றேனா, அல்லது மற்ற நடிகர்கள் ஆடறாங்க ளாங்கறது எனக்கு முக்கியமில்லை. என் டான்ஸ் நிக்கணும். அதுதான் முக்கியம்.

**மற்ற டான்ஸ் மாஸ்டர்களை விடவும் உங்களுடைய அசைவுகள், ரொம்பக் கஷ்ட மாத் தெரியுது. நடிக, நடிகைகள் உங்களைக் கண்டால் ஓடி விட மாட்டார்களா?**

இதுவரைக்கும் அப்படி ஆனதில்லை. நைசா சிரிக்கப் பேசி, ஜோக் அடிச்சி வேலை வாங்கிடுவேன். டென்ஷன் ஆக மாட்டேன். நான் எதிர்பார்க்கற ரிஸல்ட் கிடைக்கற வரைக்கும் விட மாட்டேன்.

**தமிழை விட தெலுங்கில் அதிகம் பண்ணறீங்க போல் தெரியுதே?**

அதிகமென்ன? முழுக்கவே அங்கதான். ஏன்னா டான்ஸுக்கெல்லாம் அங்கதான் வாய்ப்பு நிறைய இருக்கு. தெலுங்குல ஸ்டோரி வேல்யூ கம்மி. பொழுதுபோக்கு அதிகம். பாட்டெல்லாம் கூட டப்பாங்குத்து தான் அதிகமாக இருக்கும். ரிதம் கூட ரொம்ப வேகமா இருக்கும். என்னோட பிளஸ் பாயின்ட்டே என் வேகம்தான்.

மைக்கேல் ஜாக்ஸனுடன் நடனமாட வேண்டும் என்கிற பிரபுதேவாவின் லட்சியக் கனவு விரைவில் நனவாகப் போகிறது. சமீபத்தில் இந்தியா வரவிருக்கும் மைக்கேல் ஜாக்ஸனை, பிரபுதேவா நடிக்கும் 'காதலன்' படத்தில் கெஸ்ட் ரோலாகச் செய்யக் கூப்பிட்டிருக்கிறார்களாம். அண்ணன் சிலபல கோடிகள் கேட்டிருப்பதாகவும் தயாரிப்பாளர் சைடில் பச்சைக் கொடியைப் பாதி தூக்கி விட்டதாகவும் தகவல்.



தமிழைப் பொறுத்தவரைக்கும் கதை கொஞ்சமாவது இருந்தாலொழிய படம் ஓடாது. தவிர, கமல் மாதிரி நல்லா ஆடக் கூடியவங்க நல்லா நடிக்கவும் செய்யறதால இங்க சினிமா இண்டஸ்ட்ரியே ரொம்ப சீரியஸான விஷயமா மாறிட்டு வருது. என்டர்டெயின்மென்ட் குறைவாத்தான் இருக்கு. ஒரு படத்துல நாலு பாட்டுன்னா, ரெண்டுல டான்ஸ் வரும். முக்காவாசி ஹீரோயின் கத்தி கத்தியே முடிச்சிடுவாங்க. எனக்கு என்ன வேலை இருக்கு? அதான் தெலுங்கு படங்கள் பண்ணறேன்.

**உங்களுக்காகவே ஒரு பாட்டுக் கொடுத்து - கதைக்குச் சம்பந்தம் இருக்கோ இல்லையோ - இங்க பெரிசா விளம்பரம் பண்ணறாங்களே?**

வாஸ்தவம்தான். 'இதயம்' படத்துல அந்த பாட்டு ரொம்ப பாப்புலராச்சு. அதனால அதே மாதிரி ஒரு பாட்டு மட்டும் பண்ணக் கூப்பிட்டாங்க. வால்டர் வெற்றிவேல், சூரியன், பிரதாப் எல்லாம் ரொம்பப் பிரமாதமாப் போச்சு. இப்ப ஜென்டில்மேன் சக்கை போடு போடுது. இந்தப் பாட்டுக் களினால்தான் தமிழ்நாட்டுல நான் பாப்புலர் ஆனேன்ங்கறதை ஒத்துக்கறேன். ஆனா, இனிமேலும் இப்படி நான் ஆடுவதாக இல்லை. ஜென்டில்மேன்தான் கடைசி.

**இந்த திடீர் முடிவுக்குக் காரணம்?**

வேற ஒண்ணுமில்லை. ஹீரோவா விட்டேன் இல்லே? பவித்ரன் டைரக்ஷன்ல 'இந்து'ல முதல் முதலா ஹீரோவா நடிக்கறேன். இனிமேலும் ஒரு பாட்டு, ஒண்ணரை பாட்டுன்னு வந்து போறது அவ்வளவா நல்லா இருக்காது.

**ஹீரோ ஆகிற ஆசையும் முன்னாடியே இருந்ததா?**

அதெல்லாம் ஒண்ணுமில்லை. சூரியன் படத்துல பவித்ரன் என் டான்ஸ் பார்த்துட்டு 'நீ ஏன் ஹீரோவா நடிக்கக் கூடாது' நானே எடுக்கறேன்னார். ஆரம்ப காலத்துல எங்கப்பா ஹீரோவாகிற ஆசைலதான் மெட்ராஸ் வந்தார். அவரால அது முடியலை. சரி, பையனையாவது ஹீரோவாக்கிடுவோம்னு நினைச்சார் போலருக்கு. நடிக்கச் சொன்னார், நடிக்கறேன்.

**இனிமே டான்ஸ் மாஸ்டரா வேலை பண்ணுவது கஷ்டமில்லையா?**

ஒரு கஷ்டமும் இல்லை. நான் முதல்ல டான்ஸ் மாஸ்டர். அப்புறம்தான் ஹீரோ. ஏன், என் படத்துக்கு நானே டான்ஸ் கம்போஸ் பண்ணறேன்?

**ஓ.கே. நடன அசைவுகளில் சமீப காலமா**

---

**வாசகர் குமுறல்**

## ஓசிப் பொருள்களும் ஒய்யாரப் பாட்டும்!

பள்ளிப் பிள்ளைகளுக்கு இலவசமாக உணவு, புத்தகங்கள், சீருடை, செருப்பு முதலியன வழங்கப்படுகின்றன. இதைப் பல மாணவர்களே எப்படி குறிப்பிடுகிறார்கள் தெரியுமா? "கைதி சாப்பாடு, மூட்டை சுமக்க முன்னேற்பாடு, முண்டாகச் சட்டைகள், காந்தி செருப்பு" என ஏளனமாகத்தான்! ஓசிப் பொருள்கள் ஒய்யாரம் பாட வைக்கின்றன பிள்ளைகளை. இலவசங்களைச் சிறிதாக ஆரம்பித்துப் பெரிய அளவில் வளர்த்து விட்டார்கள். இனி திருத்தவும் முடியாது. "எண்ணித் துணிக கருமம்" என்றார் வள்ளுவர். அரசில் யார்தான் எதைக் குறித்து யோசிக்கிறார்கள்? ஹூம்.

சென்னை - 17, இரவிநதன்.

# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.

இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள், போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016



**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

TS McCann/NESTUM/1402 TM

முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபின் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்

# வானதி வழங்கும் சிறந்த நூல்கள்

இலக்கியம், சமயம், கட்டுரைகள், அறிவியல், வரலாறு, நாவல், சிறுகதைகள், மற்றும் மறுபதிப்பு நூல்கள்

| | ரூ. பை. |
|---|---|
| பதஞ்சலியோகம் | |
| சுவாமி சச்சிதானந்தா விளக்கவுரை | 125.00 |
| ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் அருள்வாக்குகள் | |
| ரா. கணபதி தொகுத்தது | |
| தெய்வத்தின் குரல் I | 90.00 |
| தெய்வத்தின் குரல் II | 95.00 |
| தெய்வத்தின் குரல் III | 100.00 |
| தெய்வத்தின் குரல் IV | 85.00 |
| தெய்வத்தின் குரல் V | 95.00 |
| தெய்வத்தின் குரல் VI | 125.00 |
| ஜய ஜய சங்கர | 40.00 |
| எஸ்.எல்.எஸ். | |
| ஜகம் புகழும் ஜகத்குரு ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் (வரலாறு) | 45.00 |
| இந்துமதம் பதிலளிக்கிறது | 40.00 |
| இசை வழியே இறையருள் பெற்றவர்கள் | 40.00 |
| பொன்னி நதிக்கரையில் புனித ஆலயங்கள் | 30.00 |
| டாக்டர். ராதா தியாகராஜன் | |
| சைவமும் தமிழும் | 18.00 |
| அகத்தில் மகளிர் | 22.00 |
| முனைவர் சுந்தரசண்முகனார் | |
| ஆரண்யகாண்ட ஆய்வு | 37.00 |
| சிலம்போ சிலம்பு | 54.00 |
| கிஷ்கிந்தா காண்டத் திறனாய்வு | 35.00 |
| மு.மு. இஸ்மாயில் | |
| ஒரு மறக்க முடியாத அனுபவம் | 35.00 |
| கவிச்சக்கரவர்த்தியும் கவியரசரும் | 30.00 |
| டாக்டர் ம.பொ. சிவஞானம் | |
| கம்பனில் தேசியம் | 12.00 |
| பாவலர் மணிசித்தன் | |
| கம்பனும் திருமங்கை மன்னனும் | 24.00 |
| பேராசிரியர் : வி. அசோக்குமாரன் | |
| கம்பனில் தவம் | 14.00 |
| புலவர். அ. அருணகிரி | |
| கம்பனில் மேதமை சான்ற மாதரார் | 18.00 |

| | ரூ. பை |
|---|---|
| SUNDA (MRM SUNDARAM) | |
| EMINENT TAMIL WRITER KALKI A LIFE SKETCH | 50.00 |
| கல்கி | |
| அலை ஓசை (சாகித்ய அகாடமி பரிசு) | 135.00 |
| பார்த்திபன் கனவு | 55.00 |
| டாக்டர். கோவி. மணிசேகரன் | |
| குற்றாலக் குறிஞ்சி (சாகித்ய அகாடமி பரிசு) | 37.00 |
| சேரசூரியன் | 40.00 |
| நீல. பத்மநாபன் | |
| தலைமுறைகள் | 57.00 |
| பாவம் செய்யாதவர்கள் | 17.00 |
| இலக்கியச் சிந்தனை பரிசு | |
| நகக்கம் | 24.00 |
| வெறுங்காவல் | 18.00 |
| கி. விட்டல்ராவ் | |
| தி.ஜ.ர.வின் எழுத்தும் தேசிய உணர்வும் | 32.00 |
| க. சமுத்திரம் | |
| மனம் கொத்தி மனிதர்கள் | 30.00 |
| இன்னொரு உரிமை | 27.00 |
| அவளுக்காக | 14.00 |
| லா.ச.ரா. | |
| ஜனனி | 27.00 |
| பச்சைக் கனவு | 25.00 |
| அபிதா | 15.00 |
| என் பிரியமுள்ள சினேகிதனுக்கு | 34.00 |
| டைரக்டர் மகேந்திரன் | |
| மெட்டி | 25.00 |
| மருதாணி | 18.00 |
| விக்கிரமன் | |
| சித்திரவல்லி | 32.00 |
| சோழமகுடம் | 37.00 |
| சத்தியமூர்த்தி | |
| ஆயிரம் நிலவே வா | 35.00 |
| புலவர். அ. வெற்றிவேலன் | |
| தில் கவனி புறப்பாடு | 12.00 |
| கிருத்திகா | |
| பாட்டி பாட்டி கதை சொல்லு | 14.00 |

★ தேவையான பிரதிகளை VPP மூலம் பெற கடிதம் எழுதுங்கள். VPP தபால் செலவு தனி.

★ புத்தக வியாபாரிகளுக்கும், பள்ளி, கல்லூரி நூலகங்களுக்கும் தக்க கழிவுத் தரப்படும்.

விவரங்களுக்கு :




**வானதி பதிப்பகம்,**

13, தீனதயாளு தெரு,

P.B. No. 6151, தி. நகர்,

சென்னை - 600 017. போன் : 442810

**அதிகம் விரசம் தெரியுதே? இது தப்பில்லையா?**

என் மூவ்மென்ட்களில் கண்டிப்பாக அப்படி இருக்காதே?

**ஏனில்லை? 'பிரதாப்' படத்துல குஷ்புவோட அந்த மார்க்கெட் ஸாங்...?**

இன்னோர் தடவை பாருங்க. எம்மேல ஒரு குற்றம் கிடையாது. பாடல் வரிகள் விரசமா இருந்ததுன்னா நான் என்ன பண்ணுவேன்? ஓரளவுக்காவது பாடலோட ஒட்டித்தானே டான்ஸ் மூவ்மென்ட் வரணும்? அப்பக் கூட நான் ரொம்ப கவனமாத்தான் பண்ணுவேன். ஒரு விஷயம் நீங்க யோசிக்கணும். நானோ சின்னப் பையன். பாட்டை மாத்து, அதை மாத்துன்னு டைரக்டர்கிட்ட கேட்டுக்கிட்டிருக்க முடியுமா? என்னை மாத்திடுவாங்க.

**ஆனா, ம்யூஸிக் டைரக்டர்களிடம் போய் உங்களுக்கு ஏத்தாற்போல ட்யூன், ரிதம் மாத்தி வாங்கிக்கறீங்கன்னு சொல்றாங்களே?**

ஆமா. தெலுங்குல எல்லா மியூசிக் டைரக்டர்களிடமும் நானே போய் உட்கார்ந்து வாங்கிப்பேன். தமிழ்ல இளையராஜா சார்கிட்ட கூட எனக்கு ஏத்தாற்போல கேட்பேன். எனக்கு அத்தனை மொழிப் புலமை கிடையாது. ட்யூன் அளவுக்கு பாடல் வரி எனக்கு அவ்வளவு நெருக்கம் கிடையாது. அதனால விரசமான வரிகளை என்னால அத்தனை சுலபமா அடையாளம் காண முடியறதில்லை. இனிமே கவனமா இருக்க முயற்சி பண்றேன்.

**ரசிகர் பட்டாளம் ரொம்ப அதிகமாச்சே உங்களுக்கு? எப்படிச் சமாளிக்கிறீங்க?**

வெளியலயே போறதில்லை. ஷூட்டிங், ஷூட்டிங் விட்டா வீடு. அதனால அதிகம் பிராப்ளம் இருக்கறதில்லை. ஆனா ரொம்ப சந்தோஷமா இருக்கு. நமக்கும் ரசிகர்கள் இருக்காங்களேங்கறதை நினைச்சு. லெட்டர் நிறைய வருது. ஃபாரின்லேர்ந் தெல்லாம் வருது. சந்தோஷமாக இருக்கு. இதெல்லாம் ரொம்பப் புதுசுங்கறதுனால ஆச்சர்யமா இருக்கு. கூடவே பயமாவும் இருக்கு!

சந்திப்பு : பா. ராகவன்

அட்டை வண்ணப்படமும்
படங்களும் :
கோபிநாத்












எப்படி, எங்க எழுச்சிப் பிள்ளையார்?

இதுவா ஊர்வலம் போறதுக்கு இவ்வளவு பெரிய தண்டனையா?

முஸ்லிம் சமுதாயத்தினர் ஒத்துழைப்பு








# கல்கி



1993
செப்டம்பர் 5
மலர் : 52
இதழ் : 6
ஸ்ரீமுக
ஆவணி 20

# காங்கிரஸின் தோல்வி;

# பி.ஜே.பிக்கும் தோல்வி!

அரசியலிலிருந்து மதத்தைத் தனிமைப்படுத்த உருவாக்கப்பட்ட மசோதா நாடாளுமன்றத்தில் தாக்கலாவதை மத்திய அரசு வேறு வழியின்றி ஒத்திப் போட்டுள்ளது. மசோதா சட்டமாக நிறைவேறத் தேவைப்படும் மூன்றிலிரண்டு பங்கு வோட்டுக்கள் கிடைப்பது சந்தேகம் என்பது ஆரம்பத்திலேயே தெரிந்த கதைதான். தி.மு.க., அ.தி.மு.க., பி.ஜே.பி., முதலிய எல்லாமே வெவ்வேறு காரணங்களுக்காக எதிர்த்தன. மசோதாவுக்கு ஆதரவு தந்த கம்யூனிஸ்டுகள் கூட சில அம்சங்களில் தங்களுக்குக் கருத்து மாறுபாடு இருப்பதை ஒளிக்கவில்லை. கடைசியாக ஜனதாதளமும் பின்வாங்க, மசோதா சட்டமாகுமுன்பே செத்து விட்டது.

இது மத்திய காங்கிரஸ் அரசுக்குத் தோல்வி என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இதுவே பி.ஜே.பி.க்கு மாபெரும் வெற்றி என்பது போல் அத்வானி பேசுவதுதான் வேடிக்கை! பி.ஜே.பிக்கும் தோல்விதான் என்று நாம் கருதுகிறோம். எப்படி?

“பி.ஜே.பிக்கு எதிராக உருவாக்கப்பட்ட மசோதா இது” என்று அதன் தலைவர்கள் கூறுகின்றனர். இருக்கலாம். அடுத்து வரப் போகும் மாநில உப தேர்தல்களை மனத்தில் கொண்டே இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கலாம். அப்படி அள்ளித் தெளித்த அவசரக் கோலமாகத் தயாரிக்கப்பட்டதாலேயே இதில் பலப்பல குறைபாடுகள் இருந்திருக்கலாம்.

ஆனால், “அரசியலிலிருந்து மதத்தைத் தனிமைப்படுத்தும் நல்லதொரு மசோதா சட்டமானாலும் கூட எங்களுக்குக் கவலை இல்லை; அத்தகைய ஒரு சட்டத்துக்கு உட்பட்டும் எங்களால் வெற்றி பெற முடியும்” என்று பி.ஜே.பி. தலைவர்களால் ஏன் சொல்ல முடியவில்லை? மதத்தை அரசியலுடன் பிணைக்காமல் தங்களால் வெற்றி பெற முடியாது என்று அவர்கள் கருதுவதுதான் காரணம். மதத்தைப் புகுத்தாமல் மக்களிடம் செல்வாக்குப் பெற முடியாது என்று அவர்கள் அஞ்சுகிறார்கள். அயோத்திக்கு ரதம் செலுத்த வேண்டும்; “கிருஷ்ணரும்” “ராமரும்” வந்து தேர்தல் பிரசாரத்தை நடத்தி வைக்க வேண்டும்; இல்லாது போனால் தோல்வியைத் தழுவ நேரும் என்று பி.ஜே.பி. கவலைப்படுகிறது. அந்த அளவுக்கு அக் கட்சி மதச்சார்புள்ள அமைப்புகளுடன் கூட்டுச் சேர்ந்து அடிமைப்பட்டுப் போய்க் கிடக்கிறது. அவ்வமைப்புகளின் ஆதரவு இன்றித் தன்னால் வெற்றி பெற முடியாது என்று பயப்படுகிறது.

இந்த அடிமைத்தனத்திலிருந்தும் அச்சத்திலிருந்தும் பி.ஜே.பி. விடுபட வேண்டும் என்று விரும்புகிறோம்; விடுபட முடியும் என்று நம்பவும் செய்கிறோம். ஏனென்றால் அத்வானி, வாஜ்பாயி போன்ற முதுபெரும் தலைவர்கள் சிறந்த அறிஞர்கள். அவர்களால் பொருளாதார ரீதியிலும் சமுதாயச் சீர்திருத்த அடிப்படையிலும் சீரிய கொள்கைகளை வகுத்து, அவற்றை அமுல்படுத்த சிறந்த திட்டங்களையும் உருவாக்க முடியும். முன்னர் அப்படித்தான் செய்து வந்தார்கள். 'ஹிந்துத்வம்' என்பது சமீப காலத்தில்தான் முதலிடம் பெற்று விட்டது.

இன்று காங்கிரஸில் நேரு குடும்பம் என்ற பிரபை இல்லை. வசீகரமான தலைவர் என்று கூறும்படி ஒருவருமே இல்லை. தனிநபர் செல்வாக்கு மூலம் காங்கிரஸ் இனி வெற்றி பெறவே முடியாது. எனவே, பி.ஜே.பி. தைரியமாக கிருஷ்ணர் வேஷம் போட்டவர்களையும் அரிதாரம் பூசிய ராமர்களையும் ஒதுக்கி விட்டு 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்ற அடிப்படையில், இறையுணர்வோடு சீரிய கொள்கைகளை இணைத்துப் பிரசாரம் செய்தே வெற்றி பெறலாம். காங்கிரஸ், பி.ஜே.பி. ஆகிய இரண்டுமே இவ்வாறு முன் வந்தால் மற்ற கட்சிகளும் நிர்ப்பந்தமாகப் பின்தொடர, அரசியலிலிருந்து மதத்தைப் பிரிக்கும் மசோதாவுக்கே அவசியம் இல்லாமல் போகும்.

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# துணிச்சலுக்கு ஒரு சபாஷ்!

◆ உறக்கத்திலிருப்பவர்களைத் தட்டி எழுப்பும் வண்ணம், "குண்டு வெடிப்பும் குறட்டை ஒலியும்" தலையங்கம் எழுதியிருந்த விதம் சம்மட்டி அடி. தமிழக போலீஸின் ஆரம்ப வேகத் தன்மையை மிக அழகாகக் கூறி உள்ளீர். 'மறுபடி தலையணையைத் தட்டிப் போட்டுக் கட்டையை விரித்து விடக் கூடாது' - மாணிக்க வரிகள்.

திருச்சி - 8, இ.மா. தமிழழகன்.

◆ "தலையங்கத்தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள குறைகளை ஜெயலலிதா குற்றச் சாட்டுகளாகக் கருதி விடாமல், அறிவுரைகளாகக் கருதி திருத்திக் கொள்ள வேண்டும். அது நிச்சயம் அவருக்குப் பெருமை சேர்க்கக் கூடியதாகவே இருக்கும்.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ அமரர் கல்கி 1939 - ல் தியாக பூமி நாவலை எழுதிய பொழுது உண்மையில் இந்தியா தியாக பூமியாகத்தான் இருந்தது. ஆனால் இன்று அது பணமுள்ளவர்களுக்கு 'போக பூமி'யாகவும், பணமில்லாதவர்களுக்கு 'சோக பூமி'யாகவும் உள்ளது. தியாகம், உண்மை, சேவை இவைகளுக்கு இன்றைய அகராதியில் இடமே இல்லை. இன்றைய இளைஞர்கள் தியாக பூமியைப் படித்து, அதன் கருத்துக்களைப் புரிந்து நடப்பார்கள் என்று நம்புகிறேன்.

சென்னை - 4, வெ. முத்துகிருஷ்ணன்.

◆ இந்த இதழில் ரஜினிகாந்த், சு. சுவாமி, சென்னா ரெட்டி என ஜெ.க்கு கிலி ஏற்படுத்திக் கொண்டிருக்கும் மும்மூர்த்திகள் பற்றிய செய்திகளை வெளியிட்டு, ஆளுங்கட்சிக்கே கடுக்காய் கொடுத்திருக்கிறீரே! உமது துணிச்சலுக்கு ஒரு சபாஷ்!

மதுரை - 16, வி. பரமசிவம்.

◆ ஆர்னிக்கா நாசரின் 'ராஜீவைக் காப்பாற்றப் போகிறேன்' சிறுகதையைப் படித்ததும் மீண்டும் அந்த வேதனை மிகுந்த நிகழ்ச்சிகள் நினைவுக்குள் வந்து இதயத்தைக் கனக்கச் செய்தது.

மணக்காடு, ஸ்ரீலஹிதாமேரி.

◆ "என்று தணியும்!" போட்டிச் சிறுகதை சிறப்பான நடை, உத்தியுடன் தொய்வு இல்லாமல் சொல்லப்பட்டிருந்தது. அறிமுக எழுத்தாளர் ப. ரவிக்குமார் நல்ல பல கதைகளைத் தருவார் என்பதை ஒவ்வொரு வரியும் காட்டுகிறது.

சென்னை - 59, ஜில்லு.

◆ நடுப்பக்கத்தில் இடம் பெற்ற ஆர். வசந்த குமாரின் 'க்ரைம் ஜோக்ஸ்' அனைத்தும் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்தன.

குமராட்சி, எம். பிரபு.

◆ மேலாண்மை பொன்னுச்சாமியின், "அக்கதை" இலக்கிய நயத்தின் திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டு. பண்புக்கு நல்ல பாதை காட்டல்!

கருமாபுரத்தனூர், ஆ. தங்கசாமி.

◆ ஆளுநரின் சிறப்பு பேட்டி அருமை. அவரது பேட்டியிலிருந்தே தமிழகத்திற்குச் சரியான ஆளுநர் கிடைத்துள்ளார் என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.

திருச்சி - 8, மா. நளினி.

◆ குடும்பக் கட்டுப்பாடு பிரசாரத்திற்கு அரசு செலவழிப்பதற்குப் பதிலாக, கல்வித் துறையில் கவனமாகச் செயல்பட்டிருந்தால் இந்த அவசியமே இல்லை என்று கவர்னர் கூறியிருக்கிறார். இதனைக் கருத்தில் கொண்டு, அரசு இனிமேலாவது கல்வித் துறையில் கவனம் செலுத்துமா?

நீர். கொடிமங்கலம், ஆர்.ஓ. வளர்மதி.

◆ பிரச்னையின் அடிப்படைக் காரணத்தைப் புரிந்து கொள்ளாமல், ஏதோ அரசியல் ஆதாயத்துக்காகவும், தாய்மார்களைக் கவரவும் தீட்டப்படும் திட்டங்கள் தோல்வியில்தான் முடியும் என்பதைத்தான் தொட்டில் திட்டத்தின் தோல்வி காட்டுகிறது. அப்படி தொட்டில் மூலம் எடுக்கப்பட்ட குழந்தைகள் சில இறந்தது இவர்களது அஜாக்கிரதை உணர்வையும் ஏதோ கடமைக்கு இத்திட்டத்தைக் கையாள்வதையுமே காட்டுகிறது.

திருச்சி - 1, ஷ்யாம் கண்ணன்.

◆ பெண் சிசுக் கொலைகளுக்கு வரதட்சிணைப் பிரச்னையே அடிப்படை என்று எல்லோராலும் எழுதவும், பேசவும் படுகிறது. ஆனால், இதில் மற்றொரு ஆழமான காரணமும் இருக்கிறது. அதாவது, முன்பெல்லாம் அடுத்தடுத்துப் பெண் குழந்தைகள் பிறந்தாலும் எட்டாவதாகவோ, பத்தாவதாகவோ ஒரு பையன் பிறந்தால் சரி என்று இருந்தனர். ஆனால் இன்று, இரண்டுக்கு மேல் கூடாது என்கிற பிரசாரத்தின் பாதிப்பு ஒருபுறம்; இருந்தால் வளர்ப்பதும் இயலாது என்பது மறுபுறம்! அதனால்தான் ஆசைக்கு ஒரு பெண் பிறந்து விட்டால் அடுத்ததாகப் பிறப்பது ஆணாகவே இருக்க வேண்டும் என்று ஆஸ்தியே இல்லாதவர்களும் ஆசைப்படுகிறார்கள். அதில் ஏமாற்றம் ஏற்படும் போதுதான் பெரும்பாலான பெண் சிசுக் கொலைகள் நடக்கின்றன. இத்தகைய கொலைகளுக்குத் தீர்வு, வம்சம் தழைப்பது ஆண் வாரிசால்தான் என்ற அடிமுட்டாள்தனமான மூட நம்பிக்கை ஒழிக்கப்படுவதேயாகும்.

காட்டூர், எஸ். அருள்மொழி.

சென்னை

**தேவிபாலா A/c**
4 காட்சிகள்

**ரூபம் A/c**

**அகஸ்தியா 70mm**

**நாகேஷ் A/c**
3 காட்சிகள்

**கமலா A/c**
பகல் காட்சி மற்றும் தமிழகமெங்கும்

குரோம்பேட்டை - ராகேஷ் A/c
கொளத்தூர் - ஸ்ரீமூகாம்பிகா
கோயம்பேடு - ராகினி A/c
காஞ்சிபுரம் - சங்கம்

ஸ்ரீ
## கிரண் பிலிம்ஸ்
பெருமையுடன் வழங்கும்



இசைஞானி
**இளையராஜா**வின்
இன்னிசையில்

# தாலாட்டு
சினிமாஸ்கோப்

T.K.ராஜேந்திரன்
இளையராஜா
B.R. விஜயலட்சுமி

தயாரிப்பு
P. மோகன்ராஜ் B.E.,
P. தனராஜ் M.Com.,

Elegant

தமிழகமெங்கும் ஸ்ரீ கிரண் பிலிம்ஸ் (பி) லிட்.,
வெளியீடு Ph: 8277812, 8251630



# சிறைக்குள்ளே ஒரு பல்கலைக்கழகம்!

**க**ணபதி ஒரு முன்னாள் ராணுவ வீரர். வயது 47. தம் உறவினர் ஒருவரை ஒரு தகராறு காரணமாய்க் கட்டுக் கொன்றுவிட்டார். இப்போது பெங்களூர் மத்திய சிறைச்சாலையில் கணபதி ஓர் ஆயுள் தண்டனைக் கைதி.

ஆம்பூரைச் சேர்ந்த ஹாபி அகமது என்ற இளைஞரும் இப்போது பெங்களூர் மத்திய சிறைச் சாலையில் ஓர் ஆயுள் தண்டனைக் கைதி. இவரது காதல், வீட்டில் பெரிய பிரச்னையாகி, ஒரு கொலையில் முடிந்தது தான் காரணம்.

கணபதிக்கும், ஹாபிக்கும் ஜெயில், வாழ்க்கைப்பாடம் மட்டும் சொல்லிக் கொடுக்கவில்லை; பல்கலைக்கழகப் பாடமும் சொல்லிக் கொடுக்கிறது. ஆம்! இவர்கள் உட்பட மொத்தம் இருபத்தாறு ஜெயில் வாசிகள் இப்போது சிறையில் இருந்தபடியே, இந்திராகாந்தி தேசிய திறந்த வெளிப் பல்கலைக் கழகத்தில் பட்டப்படிப்புப் பயிலுகிறார்கள். தேசிய அங்கீகாரம் பெற்ற ஒரு பல்கலைக் கழகம், சிறைக்குள்ளே வகுப்பு நடத்துவது இதுவே முதல் தடவை.

**செ**ன்ற வருடம் ஜூன் மாதத்தில், பெங்களூர் சென்ட்ரல் ஜெயிலின் தலைமை வார்டனாக இருந்த மோகன் என்கிற அதிகாரிக்கு இப்படி ஓர் எண்ணம் தோன்றியது. இந்திராகாந்தி தேசிய திறந்த வெளிப் பல்கலைக் கழகத்தின் பிராந்திய இயக்குனருடன் கலந்தாலோசித்தார்.

ஜெயிலில் கல்வி மையத்தைத் துவக்கி ஆடியோ, வீடியோ உபகரணங்கள், பாடப் புத்தகங்கள் ஆகியவற்றை இலவசமாகவே வழங்க பல்கலைக் கழகம் முன்வந்த போதிலும், ஆசிரியர்களின் சம்பளம் போன்ற செலவுகளை மாநில அரசு ஏற்க வேண்டும் என்று கூறியது. கர்நாடகத்தின் ஜெயில் துறை அமைச்சர், காவல் துறைத் தலைவர், சிறைத் துறைத் தலைவர், உள்துறை அமைச்சர் என்று அனைத்துத் தரப்பிலும் 'இது ஒரு புதிய முயற்சி' என்று நல்ல வரவேற்பைப் பெற்றது.

கர்நாடக மாநிலத்தில் உள்ள ஆறு மத்திய சிறைச்சாலைகளும் பரிசீலிக்கப்பட்டு, இறுதியில் பெங்களூர் மத்திய சிறைச்சாலை தேர்ந்தெடுக்கப்பட்டது. அதனையடுத்து படிக்க விருப்பம் தெரிவித்தவர்களுக்காக நுழைவுத் தேர்வு ஒன்றை நடத்தி, 26 பேரைத் தேர்ந்தெடுத்தது பல்கலைக்கழகம்.

**இ**வ்வாண்டு ஜூனில் வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டன. ஆங்கிலத்திலும் இந்தியிலும் இப்போது பாடங்கள் நடத்தப்படுகின்றன. பெரும்பாலானவர்கள் ஆங்கிலத்தையே விரும்பித் தேர்ந்தெடுத்துள்ளனர்.

''இவர்களின் ஆர்வம் என்னைப் பெருமிதம் கொள்ளச் செய்கிறது. ஒருவரும், ஒரு நாள் கூட வகுப்புக்கு 'கட்' அடிப்பதில்லை!'' என்று பெருமையுடன் குறிப்பிடுகிறார் ஆசிரியர் கே.வி. நாராயணன்.

''நான் இப்போது படிக்கும் பி.காம் படிப்பை முடித்துவிட்டு எம்.காம். படிக்கப் போகிறேன். அதன்பின் சார்டர்டு அக்கவுண்டெண்ட் ஆகவேண்டும் என்பது என் லட்சியம்'' என்கிறார் 37 வயது வேணுகோபால்.

''சட்டம் படித்து, கிரிமினல் லாயர் ஆக விருப்பப்படுகிறேன்'' என்கிறார் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட ஷாபி.

இருபது வயது வெங்கடேஷின் லட்சியம் ரொம்ப வித்தியாசமானது : ''படித்து, தேர்வுகளில் தேறி, இந்த ஜெயிலை விட்டு வெளியேறும் போது ஒரு போலீஸ் அதிகாரியாக நான் இருக்க வேண்டும்!''

தகவல் : எஸ். சந்திரமௌலி.

முதல் பாகம்

கோடை

# தியாக பூமி

"நிழல் அருமை வெயிலிலே நின்றறிமின்
ஈசன்
கழலருமை வெல்வினையில் காண்மின்."

## 1. ரயிலடி

டிங்! டிங்! டிங்!

டிணிங்! டிணிங்! டிணிங்!

போர்ட்டர் கன்னுசாமி மணியைக் கீழே வைத்து விட்டுக் கைகாட்டி மேடைக்கு ஓடினான். 'டக-டக்', 'டக-டக்' என்று இழுத்தான். ஒரு கைகாட்டி சாய்ந்தது. இன்னொரு கைகாட்டியும் சாய்ந்தது.

தூரத்தில் 'ஜிகுஜிகு' 'ஜிகுஜிகு' என்று பத்தரை மணி வண்டி வந்துகொண்டிருக்கும் சத்தம் கேட்டது.

புதுச்சத்திரம் ரயில்வே ஸ்டேஷனில் பரபரப்புக்கு அறிகுறிகள் காணப்பட்டன. படுத்துக் கொண்டிருந்த ரயிலடி நாய் எழுந்து நின்று உடம்பைச் சிலிர்த்தது.

தூங்கி வழிந்த ரயிலடிக் கடைக்காரன் திடுக்கிட்டு எழுந்திருந்தான். அவன் எதிரே ஒரு தட்டில் நாலைந்து எள்ளுருண்டையும் மூன்று வாழைப்பழங்களும் இருந்தன. அவற்றின் மீது மொய்த்த ஈக்களைப் பரபரப்புடன் ஓட்டினான்.

வெளியே, தூங்குமூஞ்சி மரங்களின் குளிர்ந்த நிழலில் இரண்டு கட்டை வண்டிகளும், ஒரு வில் வண்டியும் கிடந்தன. வண்டியில் படுத்திருந்த வண்டிக்காரர்கள் கையில் தார்க் கழியுடன் கீழே குதித்தார்கள். படுத்து அசை போட்டுக் கொண்டிருந்த மாடுகளும் ஒவ்வொன்றாக எழுந்து நிற்கத் தொடங்கின.

அந்த வண்டிக்காரர்களில், வில் வண்டியிலிருந்து குதித்தவனை மட்டும் கொஞ்சம் கவனித்துக் கொள்ளுங்கள். அவன் கவனிக்கப்பட வேண்டியவன். அவன் பெயர் நல்லான். ஆமாம்; நெடுங்கரைச் சம்பு சாஸ்திரியின் பட்டிக்காரன் நல்லான் தான்.

ஸ்டேஷன் மாஸ்டர் டிக்கட் மேஜையை இழுத்துப் பூட்டினார். ஆணியில் மாட்டியிருந்த தலைப்பாகையை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டார். கையில் ரயில் சாவியுடன் வெளியில் வந்தார்.

ஒரு கிழவனும், ஒரு ஸ்திரீயும், ஒரு சிறுவனும் அப்போதுதான் மூட்டை



முடிச்சுகளுடன் பிளாட்பாரத்துக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். சாதாரணமாய், இவ்வளவு பெரிய கூட்டத்தை அந்த ஸ்டேஷனில் பார்ப்பது அபூர்வமாதலால், ஸ்டேஷன் மாஸ்டருக்கு உற்சாகமாக இருந்தது. பின்னால் தங்கிய சிறுவனைப் பார்த்து அவர், ''அடே அரை டிக்கட்! சீக்கிரம் போ! உனக்காக ரயில் காத்துக் கொண்டு நிற்காது!'' என்று அதட்டினார். அவர் கூறியதை ஆமோதிப்பது போல் கைகாட்டியினருகில் வந்து விட்ட ரயில் கீச்சுக் குரலில் 'வீல்' என்று ஒரு சத்தம் போட்டது!

ஸ்டேஷனிலிருந்து கிளம்பிய நிழலடர்ந்த சாலை கொஞ்ச தூரத்துக்கு ரயில் பாதையையொட்டியே போயிற்று. அந்தச் சாலையில் சுமார் ஒரு பர்லாங் தூரத்தில் ஒரு பிராம்மணர் தலையில் ஒரு மூட்டையுடன் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அவர் ஏற்கெனவே விரைவாகத்தான் நடந்து வந்தார்; ரயில் வீலிட்ட சத்தத்தைக் கேட்டதும் ஒரு தடவை திரும்பிப் பார்த்து விட்டு 'லொங்கு லொங்கு' என்று ஓடி வரத் தொடங்கினார்.



ரயிலுக்கும் அவருக்கும் ஒரு நிமிஷம் போட்டி. அதன் முடிவில், அந்தோ! ரயில் தான் வெற்றி பெற்றது.

இதோ பிளாட்பாரத்துக்கு வண்டி வந்துவிட்டது! இவ்வளவு சின்ன ஸ்டேஷனில் கூட நிற்க வேண்டியிருக்கும் தலைவிதியை நினைத்துத்தானோ என்னவோ, இரண்டு தடவை பெருமூச்சு விட்டுவிட்டு நின்றது.

ஸ்டேஷன் மாஸ்டரின் பார்வை, வண்டியில் ஏறத் தயாராய் நின்ற இரண்டரை டிக்கட்டுகளின் மேல் விழுந்தது. அப்போது அவர், 'ஒருவேளை இன்றைக்கு யாராவது இறங்கக்கூட இறங்குவார்களோ!' என்று எண்ணமிட்டார். அவர் அப்படி எண்ணிக் கண்ணிமைக்கும் நேரம் ஆகவில்லை; ரயிலின் கதவு ஒன்று திறந்தது. அதிலிருந்து ஒரு மனுஷர் இறங்கினார். ரயில் நின்றதும் நிற்காததுமாய் அவர் இறங்கிய அவசரத்தைப் பார்த்தால், முந்திய ஸ்டேஷனிலேயே அவர் இறங்குவதற்குத் தயாராகக் கதவோரமாய் வந்து நின்றிருக்க வேண்டுமென்று தோன்றியது.

இறங்கிய பிரயாணி நெற்றியில் விபூதியும், முகத்தில் புன்சிரிப்பும், கழுத்தில் துளசி மணிமாலையும், கக்கத்தில் மடிசஞ்சியுமாகக் காணப்பட்டார். "ஓகோ! நம்ப சம்பு சாஸ்திரின்னா?" என்று ஸ்டேஷன் மாஸ்டர் தமக்குள் சொல்லிக்கொண்டார்.

'படேர்' என்று ரயில் கதவு சாத்தும் சத்தம்; அப்புறம் 'விஸில்' ஊதும் சத்தம்; ரயில் 'குப்' 'குப்' என்று புகைவிட்டுக் கொண்டு கிளம்பிற்று.

"என்ன, சம்பு சாஸ்திரியார்! இந்த வருஷத்து வெயில் எல்லாம் உங்கள் தலையிலேதான் போயிருக்கே!" என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

சாஸ்திரியார் இடுப்பில் செருகியிருந்த டிக்கட்டை எடுத்துக் கொண்டே, "ஆமாம்; அப்படித்தான். ஆனால் பெரியவாள், 'நிழலருமை வெயிலில்' என்று சொல்லியிருக்காளில்லையா? அந்த மாதிரி ஏதோ பகவான் கிருபையினாலே கடைசியாகக் குழந்தைக்கு வரன் நிச்சயமாச்சு....!" என்றார்.

"வரன் நிச்சயமாச்சா? ரொம்ப சந்தோஷம்."

"முகூர்த்தம் கூட வைத்தாச்சு!"

"அப்படியானால், கொஞ்ச நாளைக்கு நம்ம ஸ்டேஷன் கலகலப்பாயிருக்கும்... நல்ல வரன் தானே?"

"ஏதோ மனசுக்குப் பிடிச்ச வரன். பையன் பி.ஏ. பாஸ் பண்ணியிருக்கான். கல்யாணக் கடுதாசி வரும். நீங்கள் அவசியம் கல்யாணத்துக்கு வரவேணும்."

"நானா, சாஸ்திரிகளே! என் சொந்தக் கல்யாணமாயிருந்தாக்கூட இந்தப் பாழாப் போன ரயில் வேலையிலே லீவு கொடுக்க மாட்டானே? பார்த்திவச்ச நடத்திக்கோ என்பானே? கேளுங்கள், போன வருஷத்திலே தான் ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் சீமந்தக் கல்யாணத்துக்காக லீவு கேட்டார்....!"

"அப்படியெல்லாம் நீங்கள் சொல்லக் கூடாது. ஒரு நாளைக்காவது கட்டாயம் வந்துவிட்டு வரவேணும். நான் வண்டி அனுப்புகிறேன்."

இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் பிளாட்பாரத்திலிருந்து ஸ்டேஷனுக்குள் வந்தார்கள். அதே சமயத்தில் ரயிலுடன் போட்டி போட்டுக் கொண்டு சாலையில் ஓடி வந்த பிராம்மணர் இரைக்க இரைக்க ஸ்டேஷனை வந்து அடைந்தார். வந்தவர் சம்பு சாஸ்திரியைப் பார்த்ததும், "ஏங்காணும் சம்பு சாஸ்திரி! இந்த ரயிலிலேதானே இறங்கினீர்? ஏதடா ஒரு மனுஷன் ஓடி வருகிறானேயென்று அந்த கார்டு கிட்டச் சொல்லி வண்டியை ஒரு நிமிஷம் நிறுத்தி வைக்கக் கூடாதா?" என்றார்.

"தீக்ஷிதர்வாள்! பரிகாசம் இருக்கட்டும். குழந்தை சாவித்திரிக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கு...."

"என்ன, கல்யாணம் நிச்சயமாயிடுத்தா? அட எழவே! முன்னமே ஏங்காணும் சொல்லித் தொலைக்கலை? வரன் எந்த ஊர்? என்ன குலம்? என்ன கோத்திரம்? பையன் என்ன பண்றான்? கையிலே எவ்வளவு கொடுக்கிறீர்? மேற் கொண்டு எவ்வளவு செய்கிறீர்? சீர் செனத்தி என்ன? எதிர் மரியாதை எப்படி? எல்லாம் விவரமாய்ச் சொல்லும்."

"விவரமாய்ச் சொல்றதற்கு இப்போது சாவகாசமில்லை, தீக்ஷிதர்வாள்! பையன் பி.ஏ. பாஸ் பண்ணியிருக்கான்..."

"பி.ஏ.யா? அடி சக்கை! உத்தியோகம் ஆயிருக்கோ?"

"இன்னும் ஆகலை; அதுக்கென்ன, குழந்தை அதிர்ஷ்டத்துக்குச் சீக்கிரம் ஆயிடறது."

"உத்தியோகம் ஆகலையா? வெறும் வறட்டு பி.ஏ. தானா? போகட்டும்; நிலம் நீச்சு வீடு வாசல் ஏதாவது இருக்கோ, அதுவும் இல்லையோ?"

"நிலம் அவ்வளவாக இருப்பதாகத் தெரியலை. தகப்பனார் கல்கத்தாவிலே பெரிய உத்யோகம் பார்த்தவர். பென்ஷன் இருநூறு ரூபாய் வர்றது; கையிலே ரொக்கம் ஏதாவது இருக்கும்."

"இவ்வளவுதானா? ஏங்காணும், நிலம் நீச்சு இல்லை, உத்தியோகம் கிடையாது, கையிலே 'காஷ்' இருக்குன்னு ஊரிலே சொல்லிக்கிறா! - கடைசியிலே இந்த வரன் தானா உமக்குக் கிடைத்தது? முப்பது வேலி

பிராகதார் ஜாதகம் நான் வாங்கிண்டு வந்தேனே; பரம்பரைப் பெரிய மனுஷன், வயது நாற்பத்தைந்துதான் ஆச்சு; அது உமக்குப் பிடிக்கலை பாரும்! கெட்ட ஜாதகம் என்கிறது இதுதாங்கணும்.''

''தீக்ஷிதர்வாள்! இனிமேல் அதைப் பற்றிப் பேசி என்ன லாபம்? கல்யாணம் நிச்சயமாகி முகூர்த்தமும் வச்சாச்சு! நீங்கள்ளாம் கூடமாட இருந்து கல்யாணத்தை நடத்தி வைக்கணும். நான் போய் வர்றேன்.''



''என்ன, போய் வர்றீரா, ஏங்கணும்? ரயிலைத்தான் ஒரு நிமிஷம் நிறுத்தி வைக்கத் துப்பு இல்லை; அடுத்த ரயில் வருகிற வரையில் பேச்சுத் துணைக்காவது இருந்துட்டுப் போகக்கூடாதா? என்னங்கணும் அப்படித் தலைபோற அவசரம்? பொண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாயிட்டாத்தான் என்ன? அதுக்காக இப்படியா சப்பட்டை கட்டிண்டு பறக்கணும்?.... அடே! மனுஷன் சொல்லாமல் போறதைப் பார்த்தாயா? ஓஹோ! அவ்வளவு கர்வம் வந்துட்டதா?... ஸ்டேஷன் மாஸ்டர்வாள்! கேட்டயளா கதையை!....'' என்று தீக்ஷிதர் தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்த ஸ்டேஷன் மாஸ்டரிடம் பேசத் தொடங்கினார்.

## 2. சாலை

ஸ்டேஷனுக்கு வெளியே மாட்டு வண்டிகள் கிடந்த இடத்துக்குச் சம்பு சாஸ்திரி போனதும், வண்டிக்காரர்களில் ஒருவன், ''சாமி! வண்டி பூட்டட்டுமா?'' என்றான். இன்னொருவன், ''அட ஏண்டா கம்மா? எஜமானுக்குத்தான் சொந்த வண்டி பூட்டி நிக்குதேடா?'' என்றான்.

''ஏஞ்சாமி, நம் வீட்டிலேங்களா கல்யாணம்?'' என்று முதலில் பேசியவன் கேட்டான்.

''ஆமாண்டாப்பா! கல்யாணம் ஐந்தாறு நாளும், நெடுங்கரைக்கு வர்றவாள் யாரா யிருந்தாலும் நீங்க கொண்டு வந்து விட்டுடணும். வண்டிச் சத்தம் எங்கிட்டயே வாங்கிக்கணும்!'' என்றார் சம்பு சாஸ்திரி.

''அதுக்கென்னங்க? எஜமான் வீட்டுக்கு வர்றதுக்குச் சொல்லணுங்களா? ஜோராக் கல்யாணச் சாப்பாடு சாப்பிட்டுட்டு, ஜாம் ஜாம்னு சந்தனம் பூசிக்கிட்டு, மடி நிறைய வெத்திலைப் பாக்குக் கட்டிக்கிட்டு வர்றதில்லே!''

தயாராக வண்டியைப் பூட்டி நிறுத்தியிருந்த வில் வண்டிக்காரனைப் பார்த்து, சம்பு சாஸ்திரி, ''என்ன நல்லான்? நீயே வந்துட்டயா? நான் இன்றைக்கு நிச்சயமாய் வர்றதாகக்கூடச் சொல்லியிருக்கலையே?'' என்று கேட்டார்.

''எப்படியும் இன்னிக்கி வந்துடுவீங்க என்று ஓர் உத்தேசங்க. அப்படி ஒருவேளை நீங்க வராபோனால், மாட்டுக்குப் பருத்திக்கொட்டை மூட்டை போட்டுண்டு திரும்பலாம்னு இருந்தேனுங்க.''

சாஸ்திரி வண்டியில் ஏறி உட்கார்ந்தார். நல்லான் 'ஹய்' 'ஹய்' என்று மாட்டை முடுக்கினான். வண்டி 'கட கட' சப்தத்துடன் போகத் தொடங்கியது.

''குழந்தைக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து; தெரியுமோ இல்லையோ, நல்லான்!''

''அந்தத் தீட்செர்கிட்டச் சொல்லிக்கிட்டிருந்தது காதிலே விழுந்ததுங்க. ரொம்ப சந்தோஷங்க. நீங்க வரன் தேடக் கிளம்பி மூணு மாதத்துக்கு மேலே ஆயிட்டுதுங்க.''

''ஆமாம்! சங்கராந்தி ஆனதும் கிளம்பினேன். போகாத ஊரில்லை; தேடாத இடமில்லை. அதை ஏன் கேட்கிறே, நல்லான்! ஒன்று சரியாயிருந்தால், இன்னொன்று சரியாயிராது. படிப்பிருந்தால் சொத்து இராது; சொத்திருந்தால் படிப்பிராது; இரண்டும் இருந்தால், பையன் பிடிச்சிராது. இவ்வளவும் சரியாயிருந்தால் ஜாதகம் சரியாயிராது. ஏதோ, கடைசியில் பெரியவாள் புண்ணியத்திலே....''

இப்படிச் சொல்லிக் கொண்டே சாஸ்திரிகள் மடிசஞ்சியை அவிழ்த்து, அதனுள்ளிருந்து மூலையில் மஞ்சள் தடவிய இரண்டு ஜாதகங்களைக் கையில் எடுத்தார்.

''பாக்கி எது எப்படி இருந்தாலும் சாதகப் பொருத்தந்தாங்க சரியாயிருக்

# சுத்தம் என்றால் என்ன? இன்று முதல்




LINTAS RIN PR 2432 TM

# கண்டுணருங்கள்!

அறிமுகப்படுத்துகிறோம் இந்தியாவின் மிகச்சிறந்த டிடர்ஜெண்ட். புதிய ரின் ஸோலரக்ஸ் 3. வேறெந்த இதர பவுடர்கள், வில்லைகளையும் விட மிக மிக சக்தி வாய்ந்த டிடர்ஜெண்ட். மிகச் சமீபத்திய சர்வதேச டிடர்ஜெண்ட் தொழில் நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டிருக்கிறது. எனவே சுத்தம் என்கிற வார்த்தைக்கு உங்களுக்கு முதன் முதலாய் முழு அர்த்தம் புரியும். மேலும் **3 புரட்சிகர பலன்களை** இது அளிக்கிறது... ஒவ்வொரு முறை பயன்படுத்தும் போதும்! பாருங்கள் இதன் மூன்று பலன்களை :

1

**கடினமான கறைகளை அகற்றுகிறது... துருக் கறைகளையும் கூட!** மற்ற சிறந்த டிடர்ஜெண்ட்டுகள் துருக்கறையை இலேசாக்க மட்டுமே செய்யும். ஆனால், துருக்கறையை இருந்த இடம் தெரியாதவாறு **முற்றிலுமாக அகற்றிவிடும் ரின் ஸோலரக்ஸ் 3. துருக்கறையே அகல்கிறதெனில் மற்ற கறைகள் எம்மாத்திரம்?! இதென்ன மந்திரமா, மாயமா? இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3.**



2

**நிறத்திற்கும் பாதுகாப்பு.** மற்ற டிடர்ஜெண்ட்டுகள், நிறத்தை மங்கச் செய்து விடுகின்றன. ஆனால், நிறத்தை பாதுகாப்பதற்கென்றே விசேஷமான ஃபார்முலாவுடன் தயாரிக்கப் பட்டிருக்கிறது ரின் ஸோலரக்ஸ் 3. எனவே, எத்தனைமுறை வெளுத்தாலும் நிறம் பிரகாசமாய் விளங்குகிறது. **இதென்ன மந்திரமா, மாயமா? இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3.**



3

**கைகளுக்கும் பாதுகாப்பு.** கடுமையான ஃபார்முலாக்களைக் கொண்டு தயாரிக்கப்படும் டிடர்ஜெண்ட்டுகளிடமிருந்து உங்களுக்கு விடுதலை! ஆம். உங்கள் கைகளுக்கு எந்தவிதமான கெடுதலையும் விளைவிக்காமல், மிகச் சரியான சலவையைத் தருகிறது ரின் ஸோலரக்ஸ் 3. **இதென்ன மந்திரமா, மாயமா? இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3.** இன்றே கொண்டு வாருங்கள் உங்கள் இல்லத்திற்கு, புதிய ரின் ஸோலரக்ஸ் 3-யின் சக்தியை. இதுவரை கிடைக்காத ஸோலரக்ஸ் 3-யின் சுத்தத்துடன் பெறுவீர், மூன்று மிகப்பெரிய பலன்களை... ஒவ்வொரு முறையும்.



**இதென்ன மந்திரமா, மாயமா?**
**இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3**

அ றி மு க ச லு கை

**சேமிப்பீர் ரூ.3/-**

நீங்கள் வாங்கும் 250 கிராம் புதிய ரின் ஸோலரக்ஸ் 3 மீது

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

கணும்!'' என்றான் நல்லான்.

''அப்படியில்லை, நல்லான்! 'நாளென் செயும் கோளென் செயும்?' என்று அப்பர் சொல்லியிருக்காப்பலே, பகவான் கிருபையிருந்தால் மற்றதெல்லாம் என்னத்திற்கு? ஏதோ நம்ம திருப்திக்குப் பார்க்கவேண்டியது.''

''இப்ப நிச்சயம் பண்ணியிருக்கிற இடம் சாதகப் பொருத்தம் சரியாயிருக்குங்குல்ல?''

''கூடியவரையில் பொருத்தந்தான். செவ்வாய் தோஷ ஜாதகம்; ஆனாலும் இரண்டு மூன்று பிரபல ஜோசியாளைக் கேட்டாச்சு - பாதகமில்லை, பண்ணலாம்னு சொல்லி விட்டார்கள். செலவு தான், நல்லான், ஏகப்பட்டது ஆயிடும் போலிருக்கு!''

''வரதட்சணை எவ்வளவுங்க?''

''ரொக்கமா நாலாயிரம் ரூபாய்! அப்புறம்....''

''அப்பா! நாலாயிரம் ரூபாயா? கல்யாணச் செலவெல்லாம் சேர்த்தால் பத்தாயிரம் ரூபாய்க்கு ஓடிப் போயிடுங்களே?''

''போனாப் போகட்டும், நல்லான்! நமக்கு இருக்கிறது ஒரு குழந்தை! நாலு வருஷம் நன்னா விளைஞ்சால் கடனை அடைச்சுட்டுப் போறோம்.''

''அது கிடக்கட்டுங்க, தள்ளுங்க! நம்ம குழந்தைக்குச் செலவழிக்காதே, வேறு யாருக்குச் செலவழிக்கப் போறோம்? ஆனால், கல்யாணத்தைப் பண்ணிப் பார், வீட்டைக் கட்டிப் பார் என்று சொல்வாங்க....''

''அதெல்லாம் ஜமாய்ச்சுடுவோம், நல்லான்! நீ இருக்கிறபோது எனக்கு என்ன கவலை?''

''நான் இருந்து என்னங்க பிரயோஜனம்? அக்கிரகாரத்து ஐயமார் ஒத்தாசையல்ல வேணும்? இந்தத் தீட்சிதர் மாதிரியே எல்லாரும் இருந்தாங்கன்னா....''

''அப்படி இருக்கமாட்டார்கள், நல்லான்! இந்த மாதிரி சமயத்தில் விட்டுக் கொடுப்பார்களா?.... வண்டி ஏன் இவ்வளவு மெள்ளப் போறது? மாட்டைக் கொஞ்சம் தட்டி ஓட்டேன்!'' என்றார் சாஸ்திரியார்.

நல்லானுக்கு மிகவும் ஆச்சரியமாய்ப் போயிற்று. சாஸ்திரியார், ''மாட்டை விரட்டாதே! மெள்ளப் போகட்டும்'' என்றுதான் சொல்வது வழக்கமே தவிர, ''தட்டி ஓட்டு!'' என்று சொல்லி வழக்கமே கிடையாது. இப்போது அவர் அப்படிச் சொன்னதும், நல்லான் தார்க்குச்சியை வைத்து இரண்டு அழுத்து அழுத்தினான். அந்த உயர்ந்த ஜாதி மாடுகள், வழக்கமில்லாத வழக்கமாகத் தாரினால் குத்தப்படவே ரோசத்துடன் பிய்த்துக் கொண்டு கிளம்பின.

''நிறுத்து, நிறுத்து, நிறுத்து!'' என்று கத்தினார் சாஸ்திரிகள். ஏனெனில், அவர் கையிலிருந்த ஜாதகங்கள் இரண்டு சாலையில் விழுந்து பறந்து போய்க் கொண்டிருந்தன. வண்டி கிளம்பின வேகத்தில் அவற்றைச் சாஸ்திரி தவற விட்டுவிட்டார்.

நாலு கால் பாய்ச்சலில் கிளம்பிவிட்ட மாடுகளை இழுத்து நிறுத்துவதற்கு வெகு பிரயாசையாய்ப் போயிற்று. கடைசியாக வண்டி நின்றதும், சம்பு சாஸ்திரி குதித்து ஓடினார். சாலையின் இருபுறத்திலும் தேடிக் கொண்டே சென்றார். கடைசியாக, மூலைக்கொன்றாகக் கிடந்த இரண்டு ஜாதகங்களையும் பொறுக்கி எடுத்துக் கொண்டு வந்து மறுபடியும் வண்டியில் ஏறிக் கொண்டார்.

இந்தச் சம்பவத்தினால் நல்லானுடைய உற்சாகம் கொஞ்சம் குறைந்து போயிற்று. அவன் பிறகு சாஸ்திரியாருடன் பேச்சுக் கொடுக்காமல் வண்டியை விரைந்து ஓட்டத் தொடங்கினான்.

(தொடரும்)

***(1939 - ம் ஆண்டு ஆனந்த விகடனில் வெளியானது.)***



''தேர்தலைத் தள்ளி வெச்சதுக்குத் தேர்தல் கமிஷனுக்கு நன்றி தெரிவிச்சுக் கடிதம் எழுதியிருக்கியா... ஏன்?''

''தோல்வியை இன்னும்.... கொஞ்ச நாள் தள்ளிப் போடலாமேன்னு தான்....!''

''டெல்லியில் மாமன் மகளுக்குக் கல்யாணம்.... போய்ட்டு வந்துறலாம்க....''

''ஐயையோ நான் வரலை... தலைவி சந்தேகப்படுவாங்க...!''

- ராஜிராதா.



# பாலம்



●● மீன் வளர்ப்பு பற்றி விவரம் தெரிந்தவர்களுடன் தொடர்பு கொள்ள விரும்புகிறேன்.

– D. தியாகராஜன்,
4, வெள்ளாளத் தெரு,
தாழஞ்சேரி – 609 203.
மயிலாடுதுறை வட்டம்.

●● பட்டிமன்றத்தில் பேச ஆற்றலும் ஆர்வமும் உண்டு. எனக்கு வாய்ப்புத் தர விரும்புவோருக்கு விலாசம்.

– க. காந்திராஜ்,
6B/3 போஸ் வீதி,
4வது தெரு.
செல்லூரர் – 625 002.

●● திக்கிப் பேசுகிறவர்கள் தீவிர செயற்சிகிச்சை மூலம் குணமடைய இலவச ஆலோசனை அளிக்கப்படும் - ஞாயிறு காலை 10 முதல் 12 மணி வரை.

– இந்திய திக்குவாய் சிகிச்சை நிறுவனம்,
3/499 நால்வர் நகர்,
வடமதுரை, கோவை – 641 017.

●● மாயவரத்தில் 1956-60ல் நேஷனல் உயர்நிலைப் பள்ளியில் என்னுடன் படித்த நண்பன் சந்திரசேகர் என்னுடன் தொடர்பு கொண்டால் மிகவும் மகிழ்ச்சி அடைவேன்.

– டாக்டர். ஆர். ஸ்ரீதரன்,
P.O. Box 11414
DIBBA, FUJAIRAH,
UAE.

●● பெங்களூரில் உள்ள பாடகரான எனது உறவினருக்கு நாராயண தீர்த்தர் எழுதிய தரங்கம் நூல் தேவைப்படுகிறது. சமஸ்கிருதம், தெலுங்கு அல்லது தமிழ் லிபியில் இருக்கலாம். பாடல் நொடேஷன்கள் தேவையில்லை. தொடர்பு கொள்ள முகவரி :

– பி. பத்மநாபன்,
15/2 விசுவநாதன் தெரு,
ஸ்ரீனிவாசா அவென்யூ,
சென்னை – 600 028.

●● ஜெர்மன் தொழில்நுட்ப உதவியுடன் நிறுவப்பட்ட தொழிலகங்களில் ஜெர்மானிய பாஷையை தமிழ், ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பவராக 18 வருஷங்கள் பணிபுரிந்து சான்றிதழ்கள் பெற்றுள்ளேன். என் சேவை தேவைப்படுகிறவர்கள் எழுதவும்.

– வி. ரகுநாதன்,
Plot 14, Thulsi Garden,
Chowdeswari Temple St,
Marthahalli,
Bangalore - 560 037.

●● திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டத்துக்காக எழுதப்பட்ட "ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியாரின் கலை இலக்கியப் பணி" என்ற ஆய்வேட்டினையும் டி.கே.சி. ஆய்வடங்கலையும் நூலாக வெளியிட விரும்பும் பதிப்பகத்தார் தொடர்பு கொள்ளவும்.

– டாக்டர். ச. ஈஸ்வரன்,
விரிவுரையாளர்,
தமிழ்த் துறை,
தேசியக் கல்லூரி, திருச்சி – 620 001.

●● பாலிதீன் பைகள் பல்வேறு அளவுகளில் தயாரிக்க எண்ணியுள்ளேன். அனுபவம் உள்ளவர்கள் ஆலோசனை வழங்கினால் கட்டணம் கொடுக்கவும் தயார்.

– ஏ. பன்னீர் செல்வம்,
12, வளையல்கார தெரு,
தென்கரை,
பெரியகுளம் – 626 501.

●● பழைய ஆனந்தபோதினி, வாசன் திருக்கணித பஞ்சாங்கங்கள் 1967க்கு முற்பட்டவை தேவை. நியாயமான விலை குறிப்பிட்டு எழுதவும்.

– எஸ். நீலகண்டன்,
E-7/561, சிட்கோ நகர்,
வில்லிவாக்கம் (அஞ்சல்),
சென்னை – 600 049.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது - ஆர்.)

# பம்பாய்:

# காதலிக்கப்படும் நகரம்!



• கொட்டிக் கிடக்கும் துணிமணிகள்

●● பரபரப்புக்கு மறுபெயர் பம்பாய். ஒரு கோடி ஜனத் தொகையை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் இந்த நகரில் ஒவ்வோர் ஆண்டும் மற்ற மாநிலத்தவர்கள் வருகை அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. இந்தியாவின் ''அதிக வேலை வாய்ப்புள்ள'' நகரமாக வர்ணிக்கப்படுகிறது.

●● பம்பாய் நகர வாழ்க்கையின் உயிர்நாடி



• ''கேட் எங்கே?''

அங்கு ஓடும் மின்சார ரயில்கள். கிட்டத்தட்ட 200 மைல் சுற்றுப் புறப் பகுதிகளைப் பின்னிப் பிணைத்திருக்கும் இந்த ரயில்வே லைன்களில் உள்ள எல்லா ஸ்டேஷன்களிலும் ஒவ்வொரு இரண்டு நிமிடத்துக்கும் ஒரு ரயில் புறப்படுகிறது அல்லது வந்து நிற்கிறது.

●● பம்பாய் அதிகமான புத்தகங்கள் விற்கும் நகரமாக இருக்கிறது. கடைகளில் மட்டுமல்ல; நடைபாதைகளிலும் 'நல்ல' புத்தகங்கள் உட்பட எல்லாப் புத்தகங்களும் கிடைக்கின்றன. வெளிநாடுகளில் வெளியான சில வாரங்களில் இங்கு நடைபாதையில் மலிவாக விற்பனைக்கு வருகின்றன. இந்தத் திருட்டு அச்சு வேலை செய்வதைக் கண்டுபிடித்துத் தடுக்க, புத்தக விற்பனையாளர்கள் சங்கம் தனியார் துப்பறியும் நிறுவனத்தின் மூலம் முயன்று தோற்று விட்டது. வார நாட்களில் ரூ 1000







* கடலாக இருந்த இடத்தில்...

- 2000, சனி - ஞாயிறுகளில் ரூ 3000 - 5000 வரை வியாபாரம் என்று சொல்கிறார் நடைபாதையில் புத்தகம் விற்கும் ரமேஷ்.

●● மிக அதிக அளவில் துணிமணிகள் விற்பனையும் பம்பாயில் தான். ஜீன்ஸ் பேண்ட், ஷர்ட் எல்லாம் நடைபாதைகளில் மலிவு விலையில் கொட்டிக் கிடக்கின்றன. தரமும் நன்றாகவே இருக்கிறது. இவர்களின் மொத்த விற்பனை நாளொன்றுக்கு ஒரு கோடி ரூபாயைத் தாண்டும் என்கிறார்கள்.

●● ரூ 750/-க்கு ஒரு சாப்பாடு விற்கும் ஐந்து நட்சத்திர ஹோட்டலாக இருந்தாலும் சரி, சாதாரண பாவு பாஜி ஹோட்டலாக இருந்தாலும் சரி, ஞாயிறு மாலை போனால் நிச்சயம் காத்திருந்துதான் இடம்பிடிக்க முடியும். மத்திய தரக் குடும்பங்கள் கூட ஞாயிறு ஹோட்டலில் சாப்பிடுவதை வழக்கமாக்கிக் கொண்டிருக்கிறார்கள்!



* மலர்க் கடவுளுக்கு ஒரு சின்னம்

●● மாலை நேரங்களில் தாதர் பகுதி கடற்கரையில் பல நூற்றுக்கணக்கான ஜோடிகள் அந்நியோன்னியமான நிலையில் - சினிமா காதல் காட்சி மாதிரி - திரிவதைக் காணலாம். இவர்களில் பலர் காதலர்கள் இல்லை! பின்? - கணவன் மனைவியர்! நெருக்கடி மிகுந்த சிறிய ஃப்ளாட்டுகளில், கூட்டுக் குடும்பமாக வாழ்வதால், தம்பதிகளுக்குத் தனித்துப் பேசக் கூட இடமில்லை. அதனால்தான் இப்படி!

●● பம்பாயின் முக்கிய இடங்களான VT, சர்ச்கேட், கேட்வே போன்ற புகழ்பெற்ற கட்டடங்கள் இரவில் பளீரென்று ஒளிசிந்தி அழகாகக் காட்சி அளிக்கின்றன. ''ஐ லவ் பாம்பே'' என்ற இயக்கத்தை ஏற்படுத்தி, பம்பாய் நகரை அழகுபடுத்தும் முயற்சியின் ஓர் அம்சமாக நானா சுதாஸ்மா என்ற முன்னாள் ஷெரீப் உருவாக்கிய திட்டம் இது. தனிமனிதன், மின்சாரக் கட்டணம் ஒரு யூனிட்டுக்கு ரூ 3/- தர வேண்டி இருக்கும் போது, பல கிலோ வாட் மின்சாரத்தில் ஏன் இந்த ஆடம்பரம்?'' என்று முணுமுணுப்போரும் உண்டு!

●● இந்தியாவில் அதிகமாகப் புகைப்படம் எடுக்கப்படும் இடங்களில் இரண்டாவது (தாஜ்மஹால் முதல்) என்று வர்ணிக்கப்படும் 'கேட் வே ஆப் இந்தியா' - எப்போதும் கூட்டமாகவே காணப்படும். எல்லோரா தீவுக்கும், கடலில் 'சும்மா' ஒரு ரவுண்டு போவதற்கும் இங்கிருந்துதான் படகுகள் போகின்றன. 1911-ல் - ஜார்ஜ் மன்னரின் வருகைக்காகச் சிறப்பிக்கப்பட்ட இந்த வளைவு, இப்போது பிளாஸ்டிக் பொருள்கள், துணிமணி விற்பனையாளர்களால் ஆக்ரமிக்கப்பட்டிருப்பது பரிதாபமே. இதன் முன்னே சத்ரபதி சிவாஜியின் சிலை. அருகே விவேகானந்தரின் சிலை. இடையே அழகான பார்க். இதனால் இங்கு பிக்னிக் வரும் குடும்பங்கள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றன. ஒரு சிறுவன், தன் தந்தையிடம் ''இந்த கேட்வேயில் கேட்

தெற்கு ஆஸ்திரேலியா பகுதிகளில் காணப்படும் எறும்புப் புற்றுகள்தாம் உலகிலேயே பெரிய உருவமுடையவை. உயரம் 3.6 - 6 மீட்டர் வரை இருக்கும்! சுற்றளவு 3 மீட்டர்கள்! உலகெங்கிலுமிருந்து ஆஸ்திரேலியா வரும் உல்லாசப் பயணிகளைக் கவரும் விஷயங்களில் இந்த ராட்சத எறும்புப் புற்றுகளும் அடங்கும். இவற்றைக் கட்டும் எறும்புகளின் உருவம் எப்படி என்கிறீர்களா? அரிசிமணி அளவுள்ள எறும்புகள்தான் இவ்வளவு பிரம்மாண்டமான புற்றைக் கட்டுகின்றன.

- எஸ். ஆலன்



"பூச்சாண்டி" என்று குழந்தைகளைப் பயமுறுத்துவது இன்றும் சகஜமாய் உள்ளது. பழங்காலத்தில் உடலெங்கும் விபூதியைப் பூசிக் கொண்டு ஆண்டிகளாகத் திரிந்த சைவத் துறவிகளைச் சமணர்கள், "பூச்சு ஆண்டிகள்" என அழைக்கலாயினர். அதுவே நாளடைவில் பூச்சாண்டியாயிற்று!

- வாரியார்
சொற்பொழிவிலிருந்து
- பொன் ராஜேந்திரன்

நாணயம் இல்லாமல் இருப்பதற்குச் சட்டரீதியான பல வசதிகள் இருந்தும் மனிதன் ஏன் குற்றங்கள் புரிகிறான் என்பது தான் ஆச்சரியமாக இருக்கிறது.

- "வீக்லி"யிலிருந்து
வி. என். கோபால்

ஓர் ஆடு சிக்கினால் ராஜதந்திரிகள் அதன் ரோமத்தை மட்டும் கத்தரித்துக் கொள்வர். ஆனால் அரசியல்வாதிகளோ அதன் தோலையே உரித்துவிடுவர்.

- ஆஸ்டின் எமோலே
தகவல் :
ஆர். ஆர். பூபதி

---

எங்கே இருக்கிறது?" என்று கேட்டதும் "கழற்றி வைத்திருப்பார்கள்" என்று அவர் விளக்கியதும் காதில் விழுந்தது!

●● ஐந்து தெருக்கள் சந்திக்கும் சதுக்கம் பம்பாயின் ஃப்ளோரா பவுண்டன். பழுப்பு சலவைக் கல்லில் கட்டப்பட்டிருக்கும் இந்த சிறிய மண்டபத்தின் நான்கு தூண்களிலும் தேவதைகள் - விதானத்தில் மலர்களின் கிரேக்க கடவுளான ஃப்ளோரா. நடுவில் நீரூற்று. இந்த சிலைகள் ஆபாசமாக இருப்பதால், அப்புறப்படுத்தி விட்டு, அங்கு தேசிய நினைவுச் சின்னம் எழுப்ப வேண்டும் என்று ஒரு கோரிக்கை எழுந்ததால் இப்போது இதன் அருகில் ஆணும் பெண்ணும் இணைந்து சுடர் ஏந்தி நிற்கும் சிலை, ஓர் உயரமான பீடத்தின் மீது நிறுவப்பட்டிருக்கிறது. அருகில் பரந்த புல்வெளியில் 'ஜெய் மகாராஷ்டிரா' என்ற எழுத்துக்கள் பதிக்கப்பட்ட மேடை. மகாராஷ்டிர மாநிலம் உருவானதையும் தியாகிகளின் தீரத்தையும் குறிக்கும் நினைவுச் சின்னம்.

●● பம்பாயின் கஃப்பரேட், நாரிமன் பாயிண்ட் பகுதிகள் ஒரு காலத்தில் கடலாக இருந்த சதுப்பு நிலம். இன்று பல மாடிக் கட்டடங்கள். சிங்கப்பூரையும், ஹாங்காங்கையும் நினைவுபடுத்தும் இந்த இடம்தான் இந்தியாவில், விலை அதிகமாக உள்ள நிலப்பகுதி. மூன்று பெட்ரூம் ஃப்ளாட் மாத வாடகை ரூ 12000/-!

●● மராட்டி, இந்தி, ஆங்கில நாடகங்கள் பம்பாயில் மிகவும் பாப்புலர். ஒவ்வொரு சனி, ஞாயிறு ஹவுஸ்புல்லாகும் நாடகங்கள். ஐந்து நட்சத்திர ஓட்டலைப் போல, கார்பெட் பதிக்கப்பட்ட ஆடம்பரமான டாடா தியேட்டரில் நடக்கும் ஆங்கில நாடகங்களுக்குப் (குறைந்தபட்ச கட்டணம் ரூ 60/- தான்) போனால், நல்ல நாடகத்தையும், சிகரெட்டை நாகரிகமாகப் பிடிக்கும் புடைவை கட்டிய பெண்களையும் டைட் ஸ்கின் பேண்ட்டும் பெரிய்ய பனியனும் அணிந்து பாய்ஃபிரண்டின் தோளில் 'தொங்கியபடி' வரும் டீன்ஸ்களையும் பார்க்கலாம்.

●● "விலைவாசி அதிகம், பரபரப்பான வாழ்க்கை, நெரிசல், இவ்வளவுக்கும் மேல் பம்பாயை நீங்கள் நேசிப்பது ஏன்?" என்று கேட்ட போது, வங்கி அதிகாரியான தமிழர் சுந்தரராமன் சொன்னார் :

"நேரத்தை மதித்துத் தங்கள் பணியை ஒழுங்காகச் செய்யும் திறமைசாலிகள்தாம் காரணம். தகராறு பண்ணாத ஆட்டோ, டாக்ஸியும் நேரந் தவறாத ரயில்களுமே இதை உங்களுக்கு உணர்த்துமே!"

வண்ணப்படங்களும், கட்டுரையும் :
**ரமணன்**

வீட்டுக்கு எல்லை உண்டு!
ஊருக்கு எல்லை உண்டு!
நாட்டுக்கு எல்லை உண்டு!
-ஆனால்-
நட்புக்கு எல்லையே இல்லை...

புரட்சித் தமிழன்
**சத்யராஜ்**
நடித்து வழங்கும்

"மேஸ்ட்ரோ"
**இளையராஜாவின்**
இன்னிசையில்

ராஜ்பிலிம்ஸ் இண்டர்நேஷனல்
**ராமநாதனின்**

# உடன்பிறப்பு

சென்னை
தேவிபாரடைஸ் A/c 3 காட்சிகள்
சூரியன் A/c 3 காட்சிகள்
அனுராகா A/c 4 காட்சிகள்
பாரத் 3 காட்சிகள்
அபிராமி A/c பகல் காட்சி
மற்றும் தென்னகமெங்கும்

கதை-திரைக்கதை-
வசனம்-டைரக்ஷன்
**P. வாசு**
ஜெயனன் வின்செண்ட்
P. மோகன் ராஜ்
ராமநாதன்



Elegant

# நெடுஞ்சாலையில் நெருக்கடி நிலை!




**போ**லீஸ் காருக்குக் கூட அழகுணர்ச்சி யோடு வண்ணம் தீட்ட ஆரம்பித்து விட்ட பிரிட்டனில், இது போக்குவரத்து போலீஸ் பயன்படுத்தும் வாகனம். இவர்களுக்கு மூன்று பணிகள். 1. விபத்துக்களைத் தவிர்ப் பது, 2. உச்சகட்ட போக்குவரத்தையும் சமாளிப்பது, 3. போக்குவரத்துச் சட்டங்களை மக்கள் மீறாமல் கண்காணிப்பது.

இவற்றை எவ்வளவுதான் திறம்படச் செய்தாலும் சில சமயம் விபத்துக்கள் நேர்ந்து தான் விடுகின்றன. அப்போது போக்குவரத்து




போலிஸ் அ. துரிதமாக இயங்க வேண்டும்; ஆ. உயிர்காக்க அதிகபட்ச முயற்சி மேற்கொள்ள வேண்டும்; இ. போக்குவரத்து ஸ்தம்பித்து விடாமல் போதிய அளவு வழி ஏற்படுத்தித் தர வேண்டும்.

இதற்கெல்லாம் தன்னைத் தயார்படுத்திக் கொள்ள, லண்டன் போலீஸ் அடிக்கடி ஒத்திகை நடத்துகிறது. படத்தில், தேசிய நெடுஞ்சாலையில் ஒரு வாகன ஓட்டி தவறு செய்து விட, அதன் காரணமாகத் தொடர் விபத்துக்கள் நிகழ, அந்த இக்கட்டான நிலையில் எப்படி போலிஸும், மருத்துவர்களும், தீ அணைப்புப் படையினரும் ஒருங்கிணைந்து செயலாற்றலாம் என்பதற்கு ஒத்திகை நடக்கிறது.

- லண்டன் பிக்சர் ஸர்வீஸ்

# சக்கரவர்த்தித் திருமகன்

இலை முன் உட்கார்ந்த சந்நியாசி கூச்சமில்லாமல் சீதையின் அழகைப் புகழ்ந்து பேசினான்.

''நீ யார்? மிருகங்களும் ராக்ஷசர்களும் நிறைந்த இந்த பயங்கரமான காட்டில் தனியாக இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

ஆசார முறைப்படி செய்ய வேண்டிய உபசாரத்தைச் செய்து கொண்டும் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டும் வந்தாள். ஆயினும் ராஜகுமாரர்கள் சீக்கிரம் வர மாட்டார்களா என்று வாயில் பக்கம் பார்த்த வண்ணமாகவே இருந்தாள்.

அரக்கன் மெள்ளமெள்ளத் தான் யார் என்பதைச் சொல்ல ஆரம்பித்தான். தன் குலத்தின் பெருமையை எடுத்துச் சொன்னான். தன் சக்தி, தன் ஐசுவரியம் இவற்றையெல்லாம் சொன்னான். தன்னுடைய பிரதாபத்தைச் சொல்லி ராமனை இகழ்ந்தும் பேசினான்.

''எனக்கு மனைவியாவாய்; லங்கையில் சுகமாக இருக்கலாம், போவோம்!'' என்று முடித்தான்.

இப்படி எதிர்பாராத சங்கட நிலையடைந்ததும் சீதையானவள் கற்பின் சக்தியால் அபார தைரியமடைந்து அரக்கனை லட்சியம் செய்யாமல், ''நீசனே! துஷ்டனே! உன் விநாசம் நெருங்கிற்று! நீ மடிவாய், விலகிப் போ, உயிரைக் காப்பாற்றிக் கொண்டு ஆசிரமத்தை விட்டுப் போ!'' என்று சீறினாள்.

அரக்கனுக்குக் கடுங் கோபம் உண்டாகி விட்டது. மாறு வேஷம் நீக்கி விட்டுத் தன் நிஜ ரூபத்தைத் தரித்துக் கொண்டான். அவள் தலைமயிரை ஒரு கையில் பற்றி, மற்றொரு கையால் அவளைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு, வனத்துக்குள் வேகமாகச் சென்று, ஆயத்தமாக இருந்த தேரில் சீதையைத் தூக்கியவாறு ஏறி ஆகாயத்தில் கிளம்பி விட்டான்.

''ஹா என் நாதனே! ராமா! எங்கே போய் விட்டாய்? லக்ஷ்மணா தலை சிறந்த பக்தனே! பிடிவாதம் செய்து உன்னைத் துரத்தினேனே!'' என்று கதறி அழுதாள். அரக்கன் அவளை அசையாமல் அழுத்திப் பிடித்துத் தேரை வேகமாகச் செலுத்தினான். கீழே காட்டிலுள்ள செடிகளையும் மரங்களையும் கூவிக் கூவி, ''ராமனிடம் சொல்லுங்கள்'' என்று சீதை கதறினாள்.

அப்போது ஒரு மரத்தின் மேல் அரைத் தூக்கமாக உட்கார்ந்திருந்த ஜடாயு வேகமாகச் சென்று கொண்டிருந்த ரதத்தைப் பார்த்தான். சீதையின் குரலைக் கேட்டு, யார் என்று தெரிந்து கொண்டான். சீதையும் ஜடாயுவைக் கண்டாள்.

''நீ என்ன செய்வாய், பறவையே! லங்கேசன் என்னைத் தூக்கிச் செல்கிறான். இந்தக் கொடிய அரக்கன் எல்லா ஆயுதங்களோடு மிருக்கிறான். நீ எதிர்த்தால் உன்னைக் கொன்று விடுவான். உன்னால் என்னை மீட்க முடியாது. விஷயத்தையாவது ராமனிடம் சொல்'' என்று அழுதாள்.

ஜடாயு தேரில் ராவணனைப் பார்த்து, ''ஏ! லங்கேசனே! நான் ஜடாயு, கழுகு ராஜன், நீண்ட நாள் உன்னைப் போல் நானும் அரசனாக வாழ்ந்தவன். தம்பி! தகாத காரியத்தைச் செய்யாதே! நில்! அரசன் என்று சொல்லிக் கொள்ளுகிற நீ இத்தகைய காரியத்

ராஜாஜி



தைச் செய்யலாகாது. பெண்களைக் காப்பதல்லவா அரசனுடைய கடமை? அதிலும் ராஜ ஸ்திரீயை இவ்விதம் செய்யலாமா? அழிந்து போவாய். ஜாக்கிரதை! உடனே அவளை விட்டு விட்டுத் திரும்பிப் போ! அவளுடைய கோபப் பார்வையால் நீ சுட்டெரிந்து மாண்டு போவாய்! அவள் யார் என்று எண்ணுகிறாய்? விஷப் பாம்பை மடியில் கட்டிக் கொள்ளாதே! காலனுடைய பாசம் உன் கழுத்தின் மேல் விழுந்து, உன்னை இழுத்துப் போக ஆயத்தமாக இருப்பதை நீ அறிவாய். துஷ்டனாக நடந்து கொள்ளாதே! தாங்காத பாரத்தைச் சுமந்து போகப் பார்க்காதே! விஷத்தைத் தின்று பிழைக்கப் பார்க்காதே. நான் கிழவன். நீ யுவன். கவசம் பூண்டு தேரும் வில்லுமாக இருக்கிறாய். ஆயினும் என் கண் முன்னில் நீ வைதேகியை எடுத்துப் போக விடமாட்டேன். ராமன் இல்லாத சமயமா சீதையை எடுத்துப் போகிறாய்? ராமன் பேரில் உனக்குக் கோபம் இருந்தால் நின்று ராமனுடன் போர் செய். உனக்கு அந்த தைரியமில்லை என்பது எனக்குத் தெரியும். கோழையே! இதோ நான் இருக்கிறேன். இறங்கி என்னுடனாவது போர் செய். நான் உயிருடன் இங்கே இருக்க நீ ராமன் மனைவியைத் தூக்கிப் போக முடியாது. ரதத்திலா இருக்கிறாய்? பார், உன் தலைகள் பனம்பழம் போல் கீழே உதிர்ந்து விழப் போகின்றன. ஓடாதே, நில்!'' என்றான்.

இந்தப் பேச்சைக் கேட்ட ராவணன் சினம் கொண்டு, பறவை யான ஜடாயுவைத் தாக்கினான்.

பெரும் காற்றுக்கும் மேகக் கூட்டத் துக்கும் நடக்கும் யுத்தத்தைப் போல் ஒரு அற்புத யுத்தம் அந்த வனத்தில் நடந்தது. சிறகு கொண்ட மலையைப் போல் ஜடாயு தாங்காத கோபத்துடன் யுத்தம் செய்தான். கொல்லும் நாராசங் களை ராவணன் விடுத்தான். அவற்றை யெல்லாம் கழுகரசன் தடுத்து, ராவண னுடைய உடலைக் கீறிக் கிழித்தான். அரக்கன் ரோஷம் கொண்டு சர்ப்பங்கள் போன்ற மிகவும் கூரிய சஸ்திரங்களைப் பறவையின் மேல் விடுத்தான்.

கழுகரசன் மிகவும் துன்பப்பட் டான். தேரில் இருந்த சீதையைப் பார்ப் பான். கண்ணீர் பெருகிய அவள் கண் களையும் பார்ப்பான். அந்தக் காட்சி யைச் சகிக்காமல் ராவணனைப் பல மாகத் தாக்கினான். தன் உடலில் உண் டாகிய பெரும் காயங்களையாவது அரக்கன் செலுத்திய அம்புகளையாவது கொஞ்சமும் கவனியாமல் தாக்கினான். தன் சிறகுகளினால் அரக்கன் தலையி லிருந்த ரத்தின கிரீடத்தையும் அவன் கையிலிருந்த வில்லையும் ஒடித்துத் தள்ளினான்.

இந்த அவமானத்தைத் தாங்காமல் பெரும் கோபம் அடைந்த ராவணன் இன்னொரு வில்லெடுத்துச் சரமாரி பொழிந்தான். பக்ஷிராஜன் தன் சிறகு களால் அந்த அம்புகளை உதறித் தள்ளி அரக்கன் பிடித்த இரண்டாவது வில்லை யும் ஒடித்துத் தள்ளினான்.

அதன் மேல் ஜடாயு தேரைத் தாக்கி, பிசாசு முகங்களைக் கொண்ட கோவேறு கழுதைகளையும் சாரதியை யும் கொன்று தேரைச் சுக்குநூறாகப் பொடி செய்து விட்டான். சீதையைப் பிடித்துக் கொண்டே ராவணன் பூமியில் விழுந்தான். வாகனமிழந்து சாரதியை யும் இழந்து அரக்கன் பூமியில் விழுந்த போது, பூதங்கள் எல்லாம் 'சரி' 'சரி' என்று பக்ஷிராஜனைப் பாராட்டின.

வயோதிக நிலையும், யுத்தத்தின் சிரமமும் காயங்களும் எல்லாம் சேர்ந்து ஜடாயுவைக் களைப்படையச் செய்தது. ஒரு நிமிஷம் தள்ளாமல் நின்றான். அதைக் கண்டு ராவணன் இதுதான் சமயம் என்று சீதையைப் பிடித்திருந்த வண்ணமே தேரின்றி அப் படியே ஆகாயத்தில் கிளம்பிப் போகப்

பார்த்தான். உடனே பக்ஷி ராஜன் மறு படியும் ராவணனைத் தாக்கி நிறுத்தி, ''அரக்கனே! திருடனைப் போல் ஓடு கிறாயா? நீசனே! நீ நாசமாகப் போவது நிச்சயம். நின்று யுத்தம் செய்! யுத்தத்தில் உன் தம்பி கரன் அடைந்த கதியை நீயும் அடைவாய். கோழையைப் போலும் திருடனைப் போலும் ஓடித் தப்பப் பார்க்காதே!'' என்று சொல்லி அவ னுடைய முதுகின்மேல் திடீரென்று மேலிருந்து இறங்கி, கால் நகங்களா லும் கூரிய மூக்காலும் கொத்தியும் கீறியும் ரணமாக்கி ராவணனை மிகவும் துன்புறுத்தினான்.

இதைத் தாங்க முடியாமல் ஒரு பக்கம் சீதையைப் பிடித்துக் கொண்டே தன் முதுகின் மேலிருந்த ஜடாயுவைத் தன் கைத் தலங்களால் அடித்து விரட்டப் பார்த்தான். சீதையைப் பிடித்த கைகளை பக்ஷிராஜன் ஒன்றன் பின் ஒன்றாகக் கொத்திப் பிடுங்கி எறிந் தான். பிடுங்கி எறிய எறிய ராவணனுக் குப் புதுக் கைகள் புற்றிலிருந்து பாம்பு வருகிற மாதிரி முளைத்து வந்தன. வலி தாங்காமல் கோபம் மேலிட்டு ராவணன் சீதையைக் கீழே விட்டு விட்டு ஜடாயுவைக் கைகளால் அடித் தும் கால்களால் உதைத்தும் பலமாகத் தாக்கினான்.

இந்த கோர யுத்தம் வெகு நேரம் நடந்தது. வீரனாகிய ஜடாயு மிகவும் கஷ்டப்பட்டான். பிறகு ராவணன் தன் கத்தியை எடுத்து பக்ஷிராஜனுடைய சிறகுகளையும் கால்களையும் கருணை யின்றி வெட்டினான். பக்ஷி அதற்கு மேல் ஒன்றும் செய்ய முடியாமல் தரை யில் குற்றுயிராக வீழ்ந்தது.

ஜானகி குதித்து ஓடித் தரையில் வீழ்த்தப்பட்ட பறவையை இறுகத் தழு விக் கொண்டு, ''என் அப்பனே! எனக் காக உயிர் விட்டாயே! என் நாதனுக்கும் மற்றொரு தகப்பனாக வந்தாயே, இறந் தாயே!'' என்று புலம்பினாள்.

மகா சௌரியத்தோடு யுத்தம் செய்து விட்டு, காட்டுத் தீ எரிந்து அணைந்து விட்டது போல் தரையில் விழுந்த பறவையைப் பார்த்துவிட்டு ராவணன் திருப்தியடைந்தான். சீதையோ பறவையை அணைத்துக் கொண்டு, ''இறந்த என் மாமனார் தசரத ராஜா உயிர் பெற்றது போல் யுத்தம் செய்தாயே'' என்று புலம் பினாள்.

பிறகு அரக்கன் அவளைத் தூக்கிப்



# அருள்வாக்கு

தெரியாத ஆனந்தம் ஆனந்தமே இல்லை. இங்கே உசந்த கவிதைப் புஸ்தகம் இருக்கிறது; ஆனால் நமக்குக் கண் தெரியவில்லை என்றால் என்ன ப்ரயோஜனம்? ஆத்மா மட்டுமே இருப்பதன் ஆனந்தத்தை அநுபவ பூர்வமாகத் தெரிந்து கொள்ள முடியாத நித்திரை இப்படிப் பட்டதுதான். அதைத் ''தெரிந்த ஆனந்த''மாக உணர்வதே ஸமாதி நிலை. எத்தனையோ ஸாதனை செய்தே அதைப் பெற முடியும். தெரியாத ஆனந்தத்தில் துக்கமும் தெரியாமலிருப்பதாக உள்ள நிம்மதியைத்தான் போனால் போகிறதென்று பகவான் எல்லாருக்கும் நித்திரையில் தந்திருக்கிறான். தன் சாந்த ஸௌக்யத்தை ஜீவன் தெரிந்து கொண்டு ஆத்மாவாக ப்ரகாசித்துக் கொண்டிருப்பதான ஸமாதி நிலையை எல்லாருக்கும் தரவில்லை. அவன் க்ருபையை நம்பி, அதற்கான ஸாதனையைச் செய்தவர்களுக்கே தருவான்.

காற்றடிக்கும் போது தீபத்தின் மேலே ஒரு குடையைப் போட்டுக் கவிழ்த்து விடுவதுண்டு. அப்போது குடையின் இடுக்குகள் வழியாய் தீபத்தின் ரச்மிகள் கொஞ்சம் கொஞ்சம் வெளியில் வரும். குடையின் விளிம்பைப் பிரம்புகளை ஒரு மாதிரி முறுக்கிப் பண்ணியிருக்கும். அதனால், அதைப் போட்டுக் கவிழ்க்கிற போது விளிம்பு பூமியிலே முழுக்கப் படியாமல் அங்கங்கே கொஞ்சம் தொட்டும் தொடாமலுமாகத்தானிருக்கும். இதனால் பெரிய காற்றாக அடிக்கிற போது, குடைக்குக் கீழாகக் காற்றுப் போய் தீபம் அணைந்து விடப் போகிறதேயென்று, ஒரு கம்பளியையும் எடுத்துக் குடை மேல் போட்டு விட்டால் எப்படியிருக்கும்? அதன் தெசலிலே நம் கண்ணுக்குத் தெரியாத அதி ஸூக்ஷ்மமான இடுக்குகள் இருக்குமாதலால், இப்போதும் தீபம் எரிவதற்கான அளவு காற்று உள்ளே போகத்தான் செய்யும். ஆனாலும் நம் பார்வையிலோ, குடையின் இடுக்குகளைக் கம்பளி மறைத்து விடுவதால் முன்னே தெரிந்த தீபரச்மிகள் இப்போது அடியோடு தெரியாது. தூக்கத்தில் இப்படித்தான், உள்ளே ஆத்ம ஜ்யோதிஸ் ஸ்வஸ்தமாக இருந்து கொண்டிருக்கும்போதிலும், அதன் ஒளி, விழிப்பு நிலையில் ஏதோ துளித்துளி விஷயாநுபவத்தில் தெரிகிற மாதிரி கூட இல்லாமல், எல்லாம் ஒரே இருட்டாகி விடுகிறது. விழிப்பு நிலையின் சிக்கல் பிடுங்கல் தூக்கத்திலில்லைதான் என்றாலும், அதே ஸமயத்தில் விழிப்பிலே ஏதோ ஒரு நிழலாட்டமாகவாவது ஆத்மானந்தத்தில் துளி தெரிவதுங்கூடத் தூக்கத்திலே அடியோடு தெரியாமல், ஆத்மாநுபவத்தைக் குறித்தமட்டில் ஒரே இருட்டில் இருக்கிறோம். ஒரேயடியாக ஜ்யோதியிலேயே இருக்கிற, ஜ்யோதியாகவே இருக்கிற நிலைதான் ஸமாதி நிலை.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

போகச் சென்றான். ''ஐயோ!'' என்று கதறிக் கொண்டு அவள் இங்குமங்கும் அனாதையாக ஓடினாள். அங்கிருந்த மரங்களைப் பிடித்துக் கொண்டு, ''ராமா! எங்கிருக்கிறாய்? லக்ஷ்மணா, எங்கிருக்கிறாய்? ஓடி வாருங்கள்!'' என்று புலம்பினாள். ராக்ஷசன் அவளைப் பலாத்காரமாகத் தூக்கிச் செல்லும் போது காட்டுத் தீ பற்றி எரிந்து கொண்டிருக்கிற ஒரு மலை போல் காணப்பட்டான். வைச்ரவனுடைய தம்பியாகிய ராவணனின் தேகம் ஆகாயத்தில் வேகமாகச் செல்லும்போது சீதையின் பிரகாசத்தால் ஒரு தூமகேதுவைப் போல் இருந்தது.

இப்படி ஜானகி அரக்கன் கையில் அகப்பட்டு அபகரிக்கப்பட்டாள். அச்சமயம் சூரியன் தன் பிரகாசத்தை இழந்தான். இருள் சூழ்ந்தது. சர்வ பூதங்களும் புலம்பின.

''தர்மம் அழிந்தது. சத்தியம் மறைந்தது. நீதிநெறி, கருணை எல்லாம் ஒழிந்தன'' என்று பிரலாபித்தன.

தரையிலிருந்து பார்த்த ஜமைப் பிராணிகளும் கண்களில் நீர் விட்டன.

ராவணன் ஆகாயத்தில் கருணையின்றிப் பிராட்டியைப் பிடித்துக் கொண்டு தன் விநாசத்தை நோக்கி வேகமாகச் சென்றான். சீதை சூட்டியிருந்த மலர்களின் இதழ்கள் சிந்திச் சிதறின. ராவணனுடைய சம்பத்து சிதறி விழும் என்று சொல்லிக் கொண்டு விழுவது போல் காணப்பட்டன.

(தொடரும்)

# ஐசிஎஸ்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்







பதிவு அலுவலகம்: 41B, வெங்கிடசாமி சாலை (மேற்கு)
ஆர்.எஸ்.புரம், கோவை - 641 002 போன்: 48466

வர்த்தக அலுவலகம்: 221, சத்தியமூர்த்தி சாலை, இராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன்: 37463


50 ஆண்டுகளுக்கு மேலான அரிய சேவை

ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

## டெபாசிட் திட்டங்கள்

| திட்டம் | குறுகிய கால டெபாசிட் | | | பிக்சட் டெபாசிட் திட்டம் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| காலம் | 1 நாள் முதல் 90 நாள் | 3 மாதங்கள் முதல் 6 மாதங்கள் | 6 மாதங்கள் முதல் 12 மாதங்கள் | 12 மாதங்களுக்கு | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| வாடிக்கையாளர் வசதிக்கேற்ப 1 மாதம், 3 மாதம் மற்றும் 6 மாத கால இடைவெளிகளிலும் வட்டி விகிதம் வழங்கப்படும். | வழங்கும் வட்டி விகிதங்கள் | ஆண்டுக்கு ஒருமுறை | 18% | 18.5% | 19% | 19.5% | 20% | |
| | | 6 மாதத்திற்கு ஒருமுறை | 17% | 17.5% | 18% | 18.5% | 19% | |
| | | மாதம் ஒருமுறை அல்லது 3 மாதத்திற்கு ஒருமுறை | 16% | 16.5% | 17% | 17.5% | 18% | |

### குமுலேடிவ் டெபாசிட் திட்டம்

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

### சுபிட்சம் வைப்புத் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும்போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

**ரூ.10,000/-செலுத்தினல் 45 மாதங்களில் ரூ.21,000/-கிடைக்கிறது.**

ரூ.10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்.

### ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 45 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1320 | 2880 | 4720 | 6480 | 10040 |
| 250 | 3300 | 7200 | 11800 | 16200 | 25100 |
| 500 | 6600 | 14400 | 23600 | 32400 | 50200 |

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்

ரூ. 5/- செலுத்தி உறுப்பினராகி பயன் பெறுவீர்!

செழுமை தரும் சேமிப்புத் திட்டங்கள்! ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் ஐசிஎஸ்!

# காஞ்சுமில்லை
# கரையமில்லை

எம்மவனுக்கு மண்டையில மூளை ஜாஸ்தி. வாத்தியாரு சொல்லிக் குடுக்கத வுட ரெட்டிப்பு அறிவு. அதான் உள்ளூரு பள்ளிக்கோடத்த முடிச்ச மைக்கா மாசமே எடயங்குடி ஐரூல்ல போயி சேந்தான். அங்கயும் எம்புள்ளதான் படிப்புல ஜாக்கிளாக. புள்ள மனகல 'சூடம் குமிஞ்சு கெடந்த மாதிரி... பொறி பட்டாப் போதும்... களுவா புடிச்சுக்கிடும் படிப்பு. கடசிவரியம் கெவர்மின்ட்டு பருச்ச...! எழவடுத்த வூட்டுக்கு ஓட்டுக் கூர கூட கெடயாது. பொறவு எலக்கிட்டிரி கரண்டுக்கு எங்க போறது? சவம் மண்ணெண்ணை லாம்புதான். அதப் பத்தவச்சுக் குடுத்தம்னா போதும்... விடிய விடிய படிப்பான். புள்ள படிக்கியானேன்னு நானும் ஒறக்கமில்லாம கெடப்பேன். நல்ல... பழ...அ...ங் கருப்பட்டியப் போட்டு காப்பி உண்டுபண்ணி ஒரு நாழியலுக்கொருக்கா கடக்கட குடுப்பனா... புள்ள கோவப்படுவான்.

''யய்யா... ஒங்களுக்கு ஒறக்கம் வருலயாக்கும்? வெள்ளனயே எழும்பி தோட்டம் எறைக்கப் போணும்லியா? பேசாம படுங்க''ன்னு கரிச்சனயோட சத்தம் போடுவான்.

செத்தாவளே அந்த ஒண்ணர ஏக்கரு வாழத் தோட்டத்துல பாதிய வித்தனா... பேங்குல போட்டு வச்சி... சனஞ்சனமா புள்ளய்க்கிக் காலேசி பீசு கட்ட லாய்க்குப் பட்டுச்சி. படிச்சான். அவன் படிப்புக்குக் கேக்கயா செய்யணும்?

எங்கூருல எல்லா பயலுவளுக்கும் எம்மேல என்னா பொச்சக்காப்பு தெரியுமா? ''இவங் கெடக்குற கெடயில புள்ளய பாளயங்கோட்ட கர ஏறி படிக்க வேற வெக்கப் புட்டானே...? நாள அந்தப் பய. இவனுக்குச் சோறு போடுவான்னுதானா...?'' எங்காது படவே எத்தன பேரு கேட்டுப்புட்டானுவ தெரியுமா?

கேக்கட்டும் கேக்கட்டும். எவன் சதுரத்த வித்துமா செலவழிக்கச் சொல்லுறேன்னு மனகல வச்சிக்கிட்டு வாயக் கெட்டி வயித்தக் கெட்டி நானும் ஒரு நாலு வருசம் பணத்த கோட்ட கைக்கித் தட்டுல்லாக் குடுத்துட்டேன்.

எம்மவன் செவணைஞ்ச பெருமா பி.ஏ. பாசாகி விட்டான். அதோட போக்கன்னு பாத்தா... அதான் இல்ல. புள்ள திரும்பவும் ஒருக்கா வந்து நின்னு கண்ணக் கசக்குனான்.

''என்னல அய்யா...?''ன்னு கேட்டனா.

சின்ன வயகலயே புள்ளய்க்கி இப்படி ஒரு கரிச்சன (கரிசனம்) வந்து வேறெங்கயும் கண்டிருக்கியளா?

எம்மவனுக்கு எம்மேல கரிச்சன. எனக்கு எம்புள்ள மேல அப்பிடி ஒரு உசுரு. பொறவு எங்களுக்கு ஆருண்டு?

அவனப் பெத்துப் போட்ட புண்ணியாட்டி சின்ன பொராயத்துலயே போன பொறவு எனக்கு எம் மவன் செவணைஞ்ச பெருமா... அவனுக்கு நான். வேற என்ன எழவு உண்டுங்கிய?

ஆ...ங்...! கதய உட்டுட்டு வேற என்னம் போல்ல பொலம்புதன்...?

எம்மவன் ஐரூல்ல களம்பா (நிறைய) மார்க்கு வாங்குனானா... காலேசில சேரணும்னி ஒத்தக் கால்ல நின்னான். காலேசில படிக்க வய்க்கதுக்கு நம்மகிட்ட ஏது வக்கு?

புள்ள கண்ணக் கசக்குனானா... மனங் கேக்கல. எங்கய்யா எனக்கு எழுதி வச்சிட்டு இன்னும் கொற படிப்பும் படிக்கணும்னான்.

''அட அறிவத்த பயமவனே.. கொற படிப்பா படிக்கப்பட்டு வந்தா? இன்னும் எவ்வளவு படிப்புய்யா கொற கெடக்கு?''ன்னு கேக்கச்சில, இன்னும் ஒரு ரண்டு வருசம் 'எம்மே'யாமே... அது படிச்சிட்டா ஆபீசரு உத்தியோகம் கெடச்சிரும். பொறவு கை நெறயா பணங்காக வந்துரும்னான்.

அட.... காக பணங் கெடக்கட்டு. எம் மவன் இந்த வட்டாரத்துலயே ஆரு பெத்த புள்ளயும் படிச்சறியாத படிப்புப் படிக்க... தொறவூட்டு புள்ள மாதிரி... சீன்மாவில வார செவாசி கணேசங் கணக்கா ஸ்ட்டைலா நடக்குற நட ஒண்ணு காணாதாங்குற ஏனாக் கொறிப்பு எனக்கு.

''சரி, படிலே அய்யா''ன்னுட்டேன்.

புள்ள பூரிக்கப் போயிற்றான். பணத்துக்கு என்னெய்தன்னு கேட்டியளா...?

எங்கய்யா எழுதி வச்ச ஒண்ணர ஏக்கருல முக்கா ஏக்கரு எங்கைலதான இருந்



நிச்சி. 'ஃபி'வா பண்ணிவேன். வந்த பணத்த பேங்குல போட்டு வச்சிக்கிட்டு, சவுந்தவமா எடுத்துக் குடுத்தன். புள்ளயச் சும்மா சொல்லப்புடாது.

மனசுல ஒரு வங்கம (வன்மம்) வச்சுப் படிச்சிக்கிட்டேயிருந்தான்.

தோட்டத்த வித்தனே அந்தத் துட்டுல ஒரு கால் ரூவா அணாவ எங்கைச் செலவுக்கு எடுத்துருப்பன்னு கண்டும் நெனச்சிக்கிடாதீங்க. தொடுவனா நான்? பொறவு எப்படி எஞ்செலவு நடத்துச்சுன்னு கேக்குறியளா...?

கடவுளு கையக் கால கெதியாத்தான தந்துருக்காரு? மம்பட்டியக் கைல தூக்கிட்டேன். எங்கூரு தோட்டக் காட்டுல எந்த மவராசன் என்ன வேலைக்கு மாண்டாம்னு சொல்லுவான்? எங்கைல மம்பட்டி தூக்கிட்டம்னா மூணாளு வேலய மூர்க்கமாச் செய்வம்லியா? கைத்துட்டு பொறண்டச்சு. ஆனா என்ன நடப்புன்னா... முன்னால 'சொத்துக்கார'வாயிருந்துற்று இப்பம் 'கொத்துக்கார'வா கூலிக்கி.. கூப்புட்ட எடத்துல வேலைக்கிப் போறது கொஞ்சம் குன்னுபாடாத்தான் தெரியுது.

எம்மவங்கூட ஒரு நாளு பாளையங் கோட்ட காலேசிக்கு அவனப் பாக்கப் போவச்சில கண்ணீரும் கம்பலையுமா, ''அய்யா, எவக்காவச் கட்டி நம்ம தோட்டத்த வித்துப்புட்டு கூப்புட்ட வேலைக்குப் போறதுக்கு ஒங்கள நான் ஆளாக்கிற்றனே!''ன்னு கேட்டான்.

தாமரை செந்தூர்பாண்டி

''அட சும்மா கெடல! சொத்து பத்து இன்னு இருக்கும்... நாள போயிரும். இல்லண்ணா இன்னு போறது நாளயே வரும். ஆனா நீ படிக்கிறியே இந்தப் படிப்பும் கல்வியும் பணங்காக செலவழிச்சட்டா மட்டும் வந்துர்ற யாவாரமா...? இதுக்கெல்லாம் புண்ணியம்லா செஞ்சிருக்கணும்? எம்மவன் பெரிய படிப்புப் படிச்சு... பெரிய வேலாக்குற ஆபீசருன்னு நாலு பேரு நாள பேசுவோம் பாரு... அதவிட இந்த ஒலகத்துல எதுய்யா ஒசத்தி நமக்கு?'ன்னு கேட்டம்பாருங்க... அப்பம் எம்மவன் மொகத்தப் பாக்கணுமே...! அப்படியே செவுரியங்கணக்காச் செவந்து போச்சி. என்னச் சேத்துக் கெட்டிப்புடிச்சுக்கிட்டான்.

அப்பாடா...!

எல்லாம் நல்லபடியா முடிஞ்சுது.

எம்மவன் செவணைஞ்ச பெருமாளு பெரிய படிப்புப் படிச்சு... மெட்ராசில பெரிய ஆபீசரு உத்தியோகம் கெடச்சு.. அங்கருந்து மாத்தலாவி திருநேலி சில்லாவுக்கே ஆபீசரா... என்னம்போ 'ரெவினி' ஆபீசராமே... அதாவி வந்துற்றான்.

எவ்வளவு பெரும தெரியுமா எனக்கு? இப்பம் எங்கூருல என்ன பேச்சி தெரியுமா?

''புள்ளன்னா புள்ள செல்லச் சாமிக்கிப் பொறந்த செவணைஞ்ச பெருமாள்ல புள்ள! நம்ம ஊருக்கே அவனாலதான கெதி மோச்சங் கெடச்சிருக்கு''ன்னு எங்காது பட எல்லாரும் சொல்லச்சில எனக்கு எப்பிடி இருக்கும்னு நீங்களே பாத்துக்கிடுங்க.

இத்தன படிப்புப் படிச்சி... இவ்வளவு பெரிய ஆபீசராவிற்றானே... எங்கிட்ட எப்படி இருக்கான்னு கேக்குறியளா?

அது ஆரு? எம்மவன்ல்லியா...? என் ரெத்தம்ல்லியா அவன் திரேகத்துல ஓடுது? பொறவு எப்பிடி இருப்பான்?

''லே... நீ இருக்குற இருப்புக்கு, அழுக்கும் அசிங்கமுமாயுங் கெடக்குற என்ன நாலுவரு முன்ன வச்சி கெட்டிப் புடிக்காத''ன்னு சொன்னா கேக்கவா செய்யுறான்?

அவங்கிட்ட கையக் கெட்டி, வாயப் பொத்தி நிக்குற கிறாவுல உள்ள அதிகாரி மாரு முன்னால வச்சி ''எங்கய்யா''ன்னு என்னமா எம்புள்ள ஓடி வாரான் தெரியுமா?

ஓ! என்ன மாதிரி சென்மம் வாய்க்கறது லெச்சத்துல ஒத்தனாத்தானிருக்கணும். நாங் குடுத்து வச்சவன்தான்!

எம்மவனுக்குப் பொண்ணு தாரதுக்கு 'நான் நீ'ன்னு எவ்வளவு போட்டி தெரியுமா...?

ஆனா எம்மவன் 'எங்கய்யாவா பாத்து எவ கழுத்துல தாலி கெட்டச் சொல்றாவளோ... அவ கழுத்துலதான் தாலி கெட்டுவேன்''னுட்டானே!

அவன் சொல்லிட்டாங்குறதுக்காவ நானா எவளயாவது கருக்குன்னு இவதான் நம்ம மருமவான்னு முடிவு பண்ணிப்புடுவனாமா?

ராப்பவலா ஆலோசன பண்ணி, எம் மவனோட மனசுல எந்தப் பொண்ணு ஒட்டுதுன்னு நோட்டமறிஞ்சி, அப்புடியே கல்யாணமும் பண்ணி வெச்சேன்.

மருமவப் பொண்ணு என்னா லெச்சணம் தெரியுமா?

அடே அய்யா... எங்குடும்பத்துக்கு இப்பிடி ஒரு தங்கப் பல்லாக்கு மாதிரி பொண்ணா?! எங்கண்ணே பட்டுரும் போலிருந்துச்சு.

சொல்லடி பட்டாலும் கல்லடி படப் புடாதுன்னு சொலவட சொல்லி வச்சிருக்கே அது சும்மாவா உடும்?

எங்கண்ணுதான் பட்டுச்சோ என்னம்போ... எம்மருமவளுக்கு என்னய 'மாமா'ன்னு கூப்புடுறதுக்கோ, அவ கையால சோத்தப் போட்டு 'சாப்புடுங்க'ன்னு தாரதுக்கோ புடிக்கல. என்னக் கண்டா அவ மொகம் ஒரு மாதிரி... மிதிக்கக் கூடாத நரவல காலால மிதிச்சிட்ட மாதிரி அருவருப்பு தெரியுது.

இத ஆருகிட்ட நாஞ் சொல்லி அழ...? நெஞ்சுக்குள்ளயே உழுங்கி உழுங்கி ஒரு ஆறு மாசம் அலஞ்சு பாத்துட்டேன். சவத்துப்பய மனங் கேக்கவா செய்யுது?

எம்மருமவா எம்மவங்கிட்ட ஆசபாசமாத்தான் இருக்குறா. அவ ஊட்டு சாதி சனங்க வந்தா சிரிச்ச மொகமுஞ் சிநேகியுமா மாறிடுறா. ஆனா என்னக் கண்டா மாத்திரம் ஏன் இப்பிடி எள்ளுங் கொள்ளும் வெடிச்சாக்குல ஆவிடுறா?

தாங்க முடியல.

ஒரு நாளு எம்மவனத் தேடி அவன் வேலாக்கற ஆபீசுக்கே பெயிற்றேன்.

தனியா ஒரு ரூமுக்குள்ள கூட்டிற்றுப் போனான்.

''என்னய்யா வெசியம்?''ன்னு பயந்து போயி கேட்டான்.

''ஒங்கிட்ட பேசணும். இதுவர எம்மனகல ஒன்னு, ஒம்மனகல ஒன்னுன்னு வச்சதியாம வாந்துட்டம். இனியும் வய்க்க முடியாது''ன்னேனா...

''அதான்யா நல்லது''ன்னான். பயத்துல புள்ளய்க்கி பித்தட்டு கலங்கிப் போச்சு. என்ன சொல்லப் போறனோ... ஏது சொல்லப் போறனோன்னு என்னையே பாத்தான்.

''ஆமாய்யா! உள்ள ஒன்னு வச்சி வெளிய ஒன்னு பேசி எனக்குப் பழக்கமில்ல. ஒம் பொஞ்சாதி ஒசந்த எடத்துக்காரி. நான் கூலிக்காரன். என்னால இனுமயுங் கெடந்து அவள கஷ்டப்படுத்தி என் வவுறு வளக்க முடியாது. என்ன உட்டுரு. நான் எம் போக்குல எங்கயாவது போயி எரந்தாவது பொழச்சுக்கிடுதேன்''ன்னு மனம் நொந்து, முடிவா கேட்டனா...? அதுக்கு அவன் என்ன சொன்னான் தெரியுமா?

''அய்யா... நீங்க என்ன வுட்டுப் பிரியுறது எப்படி எம்மனசு ஒப்பும்? இன்னைய தெலமையில நீங்களும், எம் பொஞ்சாதியும் என்ன உட்டுப் பிரிய முடியாதவுங்க. ஒங்க ரெண்டு பேர்ல ஆரப் பிரிஞ்சாலும் அது எனக்குத்தான எழப்பு! எனக்குத்தான அய்மானம்? எனக்குத்தான வேதன? நீங்களும் நானுமாயிருந்த வர நீங்கதான் எனக்கு வேதம். இப்பம்.... என் பொஞ்சாதியும் எனக்குள்ள ஒரு நாதம்! வேதம் ஆய்ந்தடங்குனது. நாதம் பழகப் பழக சொகப்படும், லயப்படும். அவளை லயப்படவும், வயப்படவும் நான் எண்ணுவெய்குறனோ அதுவர வேதந்தான் தக்காக்கணும்''னு என்னெம்பெல்லாமோ எனக்குத் தெரியாத பெரிய வெசியமெல்லாம் பேசினான். படிச்சவன்ல்லியா...? படிச்ச படிப்புக்குத் தக்கன பேசினான்.

''நீ சொல்லியத வெவரமாச் சொல்லு''ன்னேன்.

''யய்யா... நீங்க எனக்கு அய்யாவா மட்டுமில்லாம, என்னப்பெத்த அம்மாயுமிருந்திய. எங்கூட சிநேகமாயும் பழகுனீங்க. எனக்காக நம்ம சொத்தக் கூட வித்து, நீங்க ஒங்க பவுரப் பாராம கூலிக்காராப் போனிய! இதெல்லாம் தியாகம்னு சொல்றத விட கடமைன்னுதான் சொல்லணும். ஆனா... இப்பம்... ஒங்க மவனுக்குத் தொணய வந்திருக்குற இன்னொருத்தியோட அலட்சியத்தையும், அவமதிப்பையும் தாங்கிக்கிட்டு, அவள மருமவளா நெனைக்காம நீங்க பெத்த மவளா நெனச்சு, அவ செய்யுற தப்பெல்லாத்தயும் பொறுத்து, நம்ம வீட்டுலயே... எங்கிட்டயே இருக்குறதுதான் நீங்க செய்யுற தியாகம்! மவனுக்காவ மருமவா செய்யுற அக்குரமத்தத் தாங்கற தகப்பன் செய்யுற தியாகம்தான்யா செறப்பான தியாகம்!'' எம்மவன் மூச்சு உடாமப் பேசினான்.

எனக்குள்ள சுரீர்னு சாட்டக் கம்பு அடியா எம்மவனோட நாயம், தர்மம்லாம் வந்து விழுகது. நான் படிக்க வெச்சனே... அந்தப் படிப்புக்கு நல்ல பலன்தான் எம் புள்ளயோட பேச்சுன்னு மனசுக்குள்ள சந்தோசப்பட்டனா... அவன் கூடயும் ஒரு படி மேல போயிற்றான்.

''அய்யா... ஒன்னு எனக்காவ நீங்க தியாகம் பண்ணுங்க. இல்லன்னா ஒங்களுக்காவ என் பொஞ்சாதிய ஒதுக்கி வச்சட்டு நான் என் வாழ்க்கயத் தியாகம் பண்ணுறேன். நீங்க என்ன சொன்னாலும் எனக்குச் சம்மதந்தான்''ன்னு ராமர காட்டுக்குப் போவச் சொல்லச்சில கூட செந்தாமர மாதிரி மொகத்தோட நின்னாராமே அப்பிடி நின்னான் எம்மவன்.

''அடே.... என்னப் பெத்த ராசா... நீ மனசாலயும் இனும கிலேசப்படாண்டாம்! எம்புத்தி தெளிஞ்சு போச்சி! அந்தப் புள்ளய (பெண்ணை) எம் மருமவளாப் பாக்காம எம் மவளாப் பாத்திருந்தா இந்தக் கோவம் எனக்கேன்யா வரப் போவது? இதுல ஏதுய்யா தியாகமும் சுத்தரிக்காயும்? நல்ல மவனா நீ இருக்கச்சில நல்ல தவப்பனா நான்ல்லா இருக்கணும்? நான் நம்ம வூட்டுக்குப் போறேன். நீ நிம்மதியா ஒன் வேலயப் பாரு''ன்னு சொல்லிற்று, எங்க வூட்ட நோக்கிப் போவச்சில எம் மனசுல ஏறிக் குந்த வெச்சிட்ட நிம்மதிக்கும் சந்தோஷத்துக்கும் கங்கு கரையே இல்ல.

''நான் கொடுத்த மொய்ப் பணத்துல மூன்று ரூபாய் 'ரிட்டர்ன்' பண்ணிடுங்க!''

''ஏன்...?''

'' 'பாயசமும், வடையும் தீர்ந்து போச்சு'ன்னு சொல்றாங்களே!''

- எஸ். முகம்மது யூசுப்



# பாண்டியன் மகள்

## இதுவரை நடந்தவை...

அரியணையேறியதும் முதற்கோலோச்சுதல்கள் சாளுக்கியப் போரைத் தொடர்ந்து வடக்கே சென்று விட்டதாலும், சொற்பகாவற்படைகளே சோழநாட்டில் காவலுக்கிருப்பதாலும் துணிவுபெற்ற பாண்டியமார்த்தாண்டன், மாறவர்மனை மதுரை அரியணையிலமர்த்தும் முயற்சியில் மேலைமங்கலத்தைத் தாக்கிக் கைப்பற்றுகிறான். சோழ இளவரசி அம்மங்கையைக் கடத்தும் முயற்சியிலிருந்து அவளை மீட்கும் அரையன் மதுராந்தகன், மேலை மங்கலத்தையும் மீட்டு சோழ இளவல் விக்கிரமனின் அன்புக்கும், இளவரசியின் காதலுக்கும் பாத்திரமாகிறான். பின் பொதிகைக் கூற்றத்திலிருந்து, மதுரை அரியாசனத்துக்கு உரிமையுடைய பூர்வ பாண்டியன் மகள் கார்குழலியை மீட்டு, சேர நாட்டுக் கடற்படைத் தளத்தையும் கண்டறிகிறான். சேரன் தலைநகருக்கு வந்து ஈழத்துத் தண்டநாயகனும் சேரனுடனும் பாண்டியனுக்குச் செய்ய முற்படும் படை உதவியில் தாக்கமேற்பட வைக்கிறான். கார்குழலியைக் கொல்ல மதுரைக்கு வரும் ஈழத்து மாக்கிலேனையும் சிக்க வைக்கிறான்.

மதுரைக்கு மீண்டு வரும் அரையன், சாளுக்கிய எல்லைக்கு ஜெயசிங்கனுடன் வந்து, சோழ இளவல் ராஜராஜனை ஜெயசிங்கனிடமிருந்து வாட்போரிட்டு மீட்டு, தனிமைக் கோட்டையையும் அழிவிருந்த ஆயிரம் போர்க் கரிகளையும் சோழர் படைகளிடம் சேர்க்கச் செய்கிறான். மன்னனின் சபையிலும் ஓரிடம் பெறும் அரையன், பாண்டிய சேரர் மீது படையெடுப்புத் திட்டமொன்றை வகுத்து, மன்னனின் ஒப்புதலையும் பெறுகிறான்.

காஞ்சியில் சிறையிலிருந்து விசாரணைக்கு வரும் வழியில் மாக்கிலேன் தப்பி உறையூர் வந்து, கார்குழலியைக் கடத்திச் சென்று விடுகிறான். மாக்கிலேன் தப்பிச் செல்லும் மார்க்கத்தை ஒருவாறு அறியும் விக்கிரமன் கார்குழலியை மீட்கவும் மாக்கிலேனைச் சிறைசெய்யவும் திட்டம் வகுத்து, ஓலையுடன் ஒரு வீரனை எங்கோ அனுப்புகிறான்.

மாக்கிலேனுக்கு உதவ வந்திருக்கும் காளிங்கனிடமிருந்தும் கொள்ளைக் கூட்டத்திடமிருந்தும் தப்பிய கார்குழலி, நாகையின் சூடாமணி விஹாரத்துத் தலைவரால் காக்கப்படுகிறாள். கடாரத்து அரச வம்சத்தவரான அந்த புத்த துறவியால் மீண்டும் மாக்கிலேனிடமிருந்து காக்கப்படும் கார்குழலி, தஞ்சையில் விக்கிரமனை அடைகிறாள்.

தப்பிய மாக்கிலேன், காட்டில் ஒளிந்து திரிந்து, பின் படகில் ஈழத்துக் கலத்தை அடைய முற்படுகிறான். ஏற்கெனவே சோழ இளவல் கொடுத்த தகவல்களின்படி, ஈழத்துக் கொடிகளுடன் வரும் சோழர் கடற்படைத் தலைவன் கருணாகர பல்லவனிடம் சென்று சிக்குகிறான் மாக்கிலேன்.

மாறவர்மனிடம் நம்பிக்கையிழக்கும் ஈழத்து இளவரசன் பராக்கிரமபாகு, கொங்குப் பாண்டிய இளவல் குலசேகரனைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவனை முதலாக வைத்து, தமிழகத்தில் கால் பதிக்கும் எண்ணத்துடன் வருகிறான். மாறவர்மனுக்குப் பதிலாக, மதுரை அரியணையில் குலசேகரனை அமர வைத்து ஈழத்து இளவரசி அஞ்சனாதேவியையும் மணமுடித்து வைப்பதாகக் கூறுகிறான். இதைக் குலசேகரனின் தந்தை ஜெகவீர பாண்டியன் ஒப்புக் கொள்ள மறுத்து, மாறவர்மனுக்குப் படையுதவியளித்தபோதிலும், அஞ்சனாதேவியின் அழகில் மயங்கிய குலசேகரன், பராக்கிரமபாகுவின் திட்டத்திற்கு உடன்படுகிறான்.

கக்கமன்னனைத் தாக்கி வென்ற அரையன் மதுராந்தகன், சோழப் படைகளுடன் தொடர்ந்து தெற்கு நோக்கி வர, மறுபுறம் மாறவர்மனுக்கு உதவ வந்த சேரர் படை மாறவர்மனிடமிருந்து வரும் செய்திக்காகக் காட்டுப் பகுதியில் காத்து நிற்கிறது. காத்துக் காத்துச் சலித்துப் போன சேரர் படைத் தலைவன் கங்காதரன், தனது உபதலைவன் ரவிசேகரனை மாறவர்மனிடம் அனுப்பி நிலைமை அறிந்துவரச் சொல்கிறான். வழியனுப்ப சிறிது தூரம் உடன் செல்கிறான்.

அப்போது மாறுவேடத்தில் சமுத்திர பந்தனாக எதிரே வருகிறான் அரையன் மதுராந்தகன். அவனைச் சேர நாட்டு ஒற்றன் என்பதாக எண்ணியிருக்கும் கங்காதரன் மகிழ்ச்சி அடைகிறான். ரவிசேகரனோ, அவன் தங்களை வேவு பார்க்க வந்த சோழ வீரன் என்று எண்ணி, தன்னிடமிருந்த கொடூரமான செண்டாயுதத்தை இம்மி பிசகாமல் சமுத்திரபந்தனின் மார்பை நோக்கி வீசுகிறான்.

## 34. நினைத்தது ஒன்று....

சேர நாட்டின் செண்டு வெளிப் போட்டிகளில் கலந்து கொண்டு, பலமுறை வாகை சூடியவனும் செண்டாயுதம் எறிவதில் இணையற்ற வீரன் என்று பெயரெடுத்தவனும் சேரர் படைப் பிரிவில் செண்டாயுதத்தைப் பயன்படுத்தப் பயிற்சியளிக்கவே உபதலைவனாக நியமிக்கப்பட்டவனுமான ரவிசேகரன், முழு பலத்துடன் எறிந்த செண்டாயுதம், சமுத்திரபந்தனை நோக்கிச் சுழன்றபடியே கனவேகமாகப் பாய்ந்ததைக் கண்ட கங்காதரன், சமுத்திரபந்தன் அன்றோடு தொலைந்தான் என்றே முடிவு கட்டினான். ஆனால் நிலவொளியில் பளபளத்து, தன்னை நோக்கிப் பாய்ந்த செண்டாயுதத்தின் இலக்கிலிருந்து ஒருவன் இமைப்பதில் பாதி நேரத்தில் சரிந்து தப்ப முடியுமென்றோ, தப்பியவனும் அந்த ஆயுதத்தை அத்தனை வேகத்தில் லாகவமாக அதன் கூரிய முனையை விடுத்து, தண்டுப் பகுதியைப் பிடித்து நிறுத்த இயலும் என்றோ, அதுவரை கற்பனை கூடச் செய்து பார்த்திராததால் சமுத்திரபந்தனின் அந்தச் சாகசத்தைக் கண்டு பிரமித்து, அப்படியே சிலையாகப் புரவியின் மீது அமர்ந்து விட்டான் கங்காதரன்.

திடீரென்று புரவியைப் பாய விட்டு, செண்டாயுதத்தை எறிந்து விட்ட ரவிசேகரன், கண்ணெதிரில் விரிந்த இந்திர ஜாலத்தைக் கண்டு பிரமித்து, பாய்ந்த தன் புரவி

விஷ்வக்சேனன்

யைக் கூட நிறுத்தத் தோன்றாமல் திகைத்துப் போய், சற்று நேரம் சென்றே புரவியை நிறுத்தினான். லாகவமாகத் தான் எறிந்த செண்டைப் பற்றிய அந்தப் புரவி வீரன், தன்னை மிகவும் நெருங்கி விட்டதையும் எந்த வினாடியிலும் திருப்பி அதைத் தன் மீது கலபமாக எறிந்துவிடும் எல்லைக்குள் தன் னெதிரில் நிற்பதையும் கண்டு திகைத்தான்.

ஆனால் அந்த சோழ வீரன் ஒன்றுமே நடக்காதது போல் புன்முறுவலுடன் புரவியிலிருந்து வெகு நிதானமாக இறங்கி, தன் பின்னால் நின்றிருந்த படைத்தலைவனை நெருங்கி வணங்கியதைக் கண்ட ரவிசேகரன், திகைப்பில் உறைந்து நின்றான்.

''சேரர் படைத்தலைவரின் புதுமையான வரவேற்புக்கு நன்றி!'' என்று வணங்கிய சமுத்திரபந்தனை நோக்கிய கங்காதரன், திகைப்பிலிருந்து விடுபட்டு, புரவியை விட்டு இறங்கச் சற்று நேரம் பிடித்தது.

''சமுத்திரபந்தா! உன்னை இதுவரையில் வணிகப் போர்வையில் உலவும் சேர ஒற்றன் என்று மட்டுமே அறிந்திருந்தேன். என் உபதலைவன் ரவிசேகரன் வீசிய செண்டாயுதத்தை இத்தனை லாகவமாக ஒருவன் பிடிக்க இயலும் என்பதை இன்றுதான் கண்டேன். இது என்ன சோழ வீரன் உடை? இங்கு எப்படி வந்தாய்?'' பிரமிப்பு நீங்காத முகத்துடன் படைத்தலைவன் சரமாரியாக வீசிய கேள்விகளைக் கேட்ட சமுத்திரபந்தன், கடகடவென்று பலமாக நகைத்தான்.

''படைத்தலைவர் நிதானித்து ஒவ்வொன்றாகக் கேட்பது நலம் என்று எண்ணு



கிறேன். வாருங்கள் உங்கள் பாசறைக்குச் சென்று நிதானமாக அமர்ந்து பேசுவோம்'' என்றான் சமுத்திரபந்தன் நகைப்பினூடே.

''இங்கு என் பாசறை அமைந்திருப்பது எப்படித் தெரிந்தது?'' என்று வினவினான் படைத்தலைவன்.

சமுத்திரபந்தன் இதற்குப் பதில் கூறாது, தன்னை நெருங்கிய ரவிசேகரனை நோக்கி, ''உங்கள் வீச்சில் நல்ல வேகமிருக்கிறது'' என்று பாராட்டியவாறே கையிலிருந்த செண்டாயுதத்தை அவனிடம் நீட்டவும் செய்தான்.

அவன் உண்மையில் பாராட்டுகிறானா அல்லது ஏளனம் செய்கிறானா என்பது புரியாமல் விழித்தான் ரவிசேகரன்.

''படைத்தலைவரே, நான் மார்த்தாண்டரிடமிருந்து வருகிறேன். உங்களது படைப் பிரிவை நாளை மாலைக்குள் கோட்டாற்றில் எதிர்பார்க்கிறார் மார்த்தாண்டவர்மர்'' என்றான் சமுத்திரபந்தன்.

இந்த சமுத்திரபந்தன் நிச்சயம் ஏதோ சித்து வித்தையில் கை தேர்ந்தவனாயிருக்க வேண்டும் என்றே முடிவு கட்டினான் கங்காதரன். அவன் வியப்புத் ததும்பிய முகத்தைக் கவனித்த சமுத்திரபந்தன், ''இதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை, படைத்தலைவரே! வேங்கியிலிருந்து நான் சோழ வீரன் உடையில்தான் தப்பி வந்தேன். வழியெங்கும் இந்த உடை பெரிதும் பாதுகாப்பளித்ததால் தொடர்ந்து அணிந்து கொண்டேன். மன்னருக்குப் பாண்டியர் நிலையைப் பற்றி அறிந்து வந்து கூற முதலில் மார்த்தாண்டரைக் கண்டு வந்தேன். வேங்கியில் இருக்கும் போது நான் அறிந்தவற்றை மார்த்தாண்டரிடம் கூறவும் செய்தேன்'' என்றான்.

''என்ன அறிந்தாய் சமுத்திரபந்தா?''

''சாளுக்கியப் போரில் சோழ வீரர்கள் பெருமளவில் மாண்டு விட்டனர். இங்கிருந்த காவற்படைகளில் பெரும் பகுதி வடக்கே செல்வதையும் கண்டேன். மாறவர்மரும் மார்த்தாண்டரும் அதைப் பரிசோதிக்க எண்ணினார்கள்.''

''எப்படி?''

''எல்லைப்புற கிராமங்களையும் நகரங்களையும் தாக்கிக் கைப்பற்றினார்கள். எந்தவித எதிர்ப்புமின்றி அவை கைவசமாயின!''

படைத்தலைவனுக்கு, சேரர் உதவிப் படையின்றி மாறவர்மன் தாக்குதலைத் தொடங்கியதன் காரணம் புரிந்தது.

''இனி நமது உதவிப் படை அவசியமில்லையா?''

''கண்டிப்பாக அவசியம் படைத்தலைவரே! இனி கோட்டாற்றிலிருந்து கிளம்பும் பாண்டியருடன் நமது படையும் இணைந்து, மதுரையை நோக்கி அணிவகுக்கும். நாளை மாலைக்குள் நமது படையைக் கோட்டாற்றில் எதிர்பார்க்கிறார் மாறவர்மர்.''

''மதுரை வரையில் செல்ல வேண்டுமானால் இருக்கும் நமது படை போதாதே சமுத்திரபந்தா!'' கங்காதரன் குரலில் கவலை தொனித்தது.

''உண்மைதான், படைத்தலைவரே! தேவையானால் விழிஞத்திலிருக்கும் நமது படைப் பிரிவையும் வரவழைத்து விடலாம். மதுரையைக் கைப்பற்றித் தரும் பட்சத்தில் ஏற்கெனவே ஒப்புக் கொண்ட பகுதிகளுடன் கருவூர் வஞ்சி முதல், வைகையும் முல்லையாறும் கலக்கும் உத்தமபாளையத்தின் எல்லை வரையில் நமக்களிப்பதாக எழுதிக் கொடுத்திருக்கிறார் மாறவர்மர்'' என்ற சமுத்திரபந்தன், கச்சையிலிருந்து ஓர் ஓலைக் குழலை எடுத்துப் படைத்தலைவனிடம் நீட்டினான்.

ஓலையைக் கண்ட கங்காதரன் வாயடைத்து நின்றான். கிட்டத்தட்ட நானூற்றுக்கும் மேற்பட்ட கிராமங்களும் நிலங்களும் அதன் மூலம் சேர நாட்டுக்குச் சொந்தமாகுமென்று அறிவித்த அந்த ஓலை, பாண்டிய ராஜ முத்திரையுடனும், மாறவர்மனது கையொப்பமுடனுமிருந்தது. இத்தனை பெரிய காரியத்தைச் சாதித்து விட்டு ஒன்றுமே நடவாதது போல் சர்வ சாதாரணமாக எதிரே நின்றிருந்த சமுத்திரபந்தனைப் பாராட்ட வார்த்தைகள் கிடைக்காமல் திணறினான் கங்காதரன்.

ரவிசேகரனை அடுத்த நாள் காலையில் படைகளை நடத்திச் செல்ல உத்தரவிட்ட கங்காதரன், தான் சென்று மன்னரைக் கண்டு ஓலை பற்றிய விவரங்களைத் தெரிவித்து, விழிஞத்துப் படைப் பிரிவை அழைத்து வர ஒப்புதலையும் பெற்று வருவதாகக் கூறி தலைநகரை நோக்கிக் கிளம்பினான்.

சமுத்திரபந்தனோ, ''படைத்தலைவரே! நான் வந்த பணி முடிந்து விட்டது. நமது படையை வரவேற்க ஏற்பாடுகளைச் செய்யவும் மாறவர்மரிடம் தெரிவிக்கவும் நான் இப்படியே திரும்புகிறேன்'' என்றான்.

விடைபெற்றுக் கொண்ட சமுத்திரபந்தன் மீண்டும் அந்த மலைப் பாதையில்

''என் மாமியார் என்னைத் திட்டினாலும் அதுல ஒரு நாகரிகம் இருக்கும்.''

''எப்படி?''

''என்னைத் திட்டறப்ப கிரைண்டரைப் போட்டுடுவா! வெளியே கேட்காது!''

- சூர்யா செந்தில்



திரும்பி, வந்த வழியே தனது புரவியை நடத்தினான். கடும் குளிரை அள்ளி வீசிய காற்றை லட்சியம் செய்யாது அவன் செல்வதைக் கண்ட சேரர் உபதலைவன், நீண்ட நேரம் அங்கேயே நின்றிருந்தான்.

"**சு**ளிறு மாய்க்குங் கதிர்க் கழனி'' - யானைகளையும் மறைக்கும் அளவிற்கு வளர்ந்த நெற்கதிர்களை உடைய வயல்கள் என்று மதுரைப் பாண்டி மண்டலத்தை வர்ணிக்கிறது ''மதுரைக் காஞ்சி''. இங்கு உத்தமபாளையத்தின் வளத்துக்குக் காரணமாக வைகையும் முல்லையாறும் எல்லைகளாக அமைந்திருந்தன.

ஆறுகளின் சங்கமத் துறையை அடுத்த பெரும் சமவெளியில் தனது போர் ரதத்தில் நின்று கொண்டிருந்தான் உத்தமபாளைய மன்னன் ருத்திரப் பாண்டியன்.

கரிய நிறத்தாலும் கொடுவாளைப் போல வளைந்து நீண்ட மீசையாலும் நெற்றியில் பளிச்சிட்ட திருநீற்றாலும் அசல் ருத்திரனாகவே காட்சியளித்த உத்தமபாளைய மன்னன், சற்று உயரம் குறைவாகவே இருந்தாலும் பல போர்களைக் கண்ட பெரு வீரன் என்பதை அவன் திட சரீரமும், விரிந்த தோள்களும் கைகளிலும் திறந்த மார்பிலும் தென்பட்ட வடுக்களும் நிரூபித்தன. பெயருக்குத் தகுந்தபடி களத்தில் நாசத்தை விளைவிப்பவன் என்று பெயர் பெற்றிருந்த அவன், தன் கரங்களிலிருந்த ஓலையை வெறித்துப் பார்த்தபடி சிந்தனையில் ஆழ்ந்து போயிருந்தான்.

மாறவர்மனது ஓலையையும் மன்னன் சிந்தனையையும் கவனித்தபடி அருகிலிருந்த அமைச்சர் மெல்ல குரலை செருமிக் கொண்டார்.

''மன்னா, இந்தப் போரில் கலந்து கொள்வதெனத் தீர்மானித்து விட்டீர்களா?'' என்று வினவினார்.

மன்னனின் சிவந்த விழிகள் அமைச்சரை ஏறெடுத்து நோக்கின.

''கொடுத்த வாக்கைக் காப்பது நம் மரபல்லவா அமைச்சரே?''

''உண்மைதான் மன்னா. ஆனால் அந்த வாக்குறுதி உன் மக்களையே அழிப்பதாக இருந்தால் அதை மீறுவது தவறாகாது. மக்களுக்காகத்தான் மன்னனே தவிர, மன்னன் கொடுத்த வாக்கிற்காக மக்களை வருத்துவது தவறு.'' - அமைச்சர் அழும்பில்வேளின் பதில் திட்டவட்டமாக வந்தது.

ஏழு பெரும் வேளிர் குலத்தின் தலைவராகவும் தன் அமைச்சராகவும் மட்டுமன்றி, படைகளை நடத்தும் தளபதியாகவுமிருந்த அழும்பில்வேள் மறுத்தால் தனது படையின் பெரும் பகுதி தன்னை விட்டு விலகி விடும் என்பது புரிந்ததால் மன்னன் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தான்.

''மன்னா! மதுரை அரியணை வாரிசின்றிப் போனதால் மாறவர்மருக்கு உதவ வாக்களித்தோம். ஆனால் பாண்டியர் மகள்



''இப்பல்லாம் லஞ்சம் வாங்குறதை அடியோடு நிறுத்திட்டேன்.''

''நிஜமாவா?''

''ஆமாம்! ரிடையர் ஆனதுக்கப்புறமும் லஞ்சம் கேட்டா அவ்வளவா நல்லாயிருக்காதே...!''

- செங்குன்றம் கே. ரமேஷ்ராம்

மீண்டது தெரிந்த பின்னும் நாம் இந்தப் போரில் கலந்து கொள்வது அவசியமா?''

ருத்திரப் பாண்டியன் முகத்தில் உஷ்ணம் ஏறத் தொடங்கியது.

அமைச்சர் தொடர்ந்தார் : ''மாறவர்மருக்கு உதவ நமது படை செல்வதை மக்கள் விரும்பவில்லை மன்னா, ஆனால்...''

''ஆனால் என்ன?''

''ஆனால் பாண்டியர் மகளை அரியணையில் அமர்த்த மாறவர்மர் ஒப்புக் கொண்டாலோ அல்லது மாறவர்மரை மணக்க இளவரசி ஒப்புக் கொண்டாலோ, நாம் போரில் கலந்து கொள்ளத் தடையேதும் இல்லை.''

''அமைச்சரே! ஜடாவர்ம பாண்டியரது மகள் சோழன் பாதுகாவலில் அல்லவா இருக்கிறாள்?''

''ஆம். அவள் உறையூரில் இருக்கிறாள். ஆனால் ஒருவேளை விக்கிரமன் தோற்றால், அவன் தோல்வியை ஒப்புக் கொள்ள மறுப்பவனோ அல்லது வெற்றி பெற்றவர் கேட்பதைத் தர மறுப்பவனோ அல்ல. அவன் சுத்த வீரன்.''

அமைச்சர் கூறியது முற்றிலும் உண்மையென்பது மன்னனுக்குப் புரிந்தது.

''அமைச்சரே, மாறவர்மருக்குத் தற்போது சேரர் படையும் ஈழத்துப் படையும் உதவ இருக்கின்றன. பாண்டியரான நாம் உதவ மறுப்பது நமக்குப் பெருமை தராது. முதலில் போர் முடியட்டும். அரியணை பற்றிய விஷயத்தைப் பிறகு பேசித் தீர்த்துக் கொள்ளலாம். மாறவர்மர் கேட்டுக் கொண்டுள்ளபடி நமது படைகளை மதுரைக்குத் தெற்கே கழுகு மலையடிவாரத்தில் பாசறை அமைக்க ஏற்பாடுகள் செய்யுங்கள்'' என்று உத்தரவிட்டான் ருத்திரப் பாண்டியன்.

**அ**ன்று மாலையே கிளம்பிய உத்தமபாளையத்தின் படை, முல்லையாற்றைக் கடக்கத் துவங்கியது. பாதிப் படை ஆற்றைக் கடந்ததும் ஆற்றின் போக்கைக் கவனித்த வீரர்கள் சற்றுத் தயங்கினார்கள். வெள்ளம் ஏறத் தொடங்கியிருந்தது. இரவும் விரைந்து கவியத் தொடங்கியதால் பாதிப் படையுடன் இக்கரையில் நின்ற மன்னன், மறுநாள் விடிந்ததும் பயணத்தைத் தொடர முடிவு செய்தான்.

ஆனால் அந்த முடிவு பெரும் விபரீதத்தை ஏற்படுத்தும் என்பதை முன்னதாக உணர்ந்திருந்தால் பாதிப் படைகளை மட்டும் அக்கரை செல்ல அனுமதித்திருக்கவே மாட்டான்.

இரவு ஏறத் துவங்கி ஒரு ஜாமம் சென்ற பிறகு அந்த விபரீதச் செய்தியைத் தாங்கிய வீரன் அதிவேகமாகவும் பதற்றத்துடனும் மன்னன் கூடார வாயிலில் நுழைந்தான்.

ஆழ்ந்த சிந்தனையுடன் கைகளைப் பின் புறம் கட்டியபடி உலவிக் கொண்டிருந்த மன்னன், வாயிலில் மூச்சிரைக்க வந்து நின்றவனை வியப்புடன் நோக்கினான்.

''மன்னவா, நாம் மோசம் போய் விட்டோம்'' என்று குழறிய வீரனை ஒன்றும் விளங்காமல் பார்த்தான் ருத்திரப் பாண்டியன்.

''என்ன உளறுகிறாய்? விவரமாகச் சொல்'' என்ற மன்னன், அமைச்சரை அழைத்துவர வீரனொருவனையும் ஏவினான்.

''நான் உளறவில்லை மன்னா; நேரில் கண்டதைத்தான் கூறுகிறேன். வடக்கே சாளுக்கியருடன் போரிட்டுக் கொண்டிருப்பதாக நாம் நினைத்துக் கொண்டிருக்கும் சோழர் படை, நமக்கு நேர் வடக்கே ஒன்றரைக் காத தூரத்தில் நம்மை நோக்கி வந்து கொண்டிருக்கிறது'' என்றான் அந்த வீரன்.

சோழர் காவற்படைகளும் வடக்கே செல்வதாக அதுவரை நிலவிய வதந்திகள் முற்றிலும் பொய்யென்பதையும், வடக்கே போரை வெற்றியுடன் முடித்து, சோழர் படைகள் தெற்கே திரும்புகின்றன என்பதையும் அறியும் முதல் வாய்ப்பு ருத்திரப் பாண்டியனுக்கே கிடைத்தது.

''நம் ஒற்றர்கள் என்ன ஆனார்கள்? கங்க மன்னனும் சிங்களனும் என்ன ஆனார்கள்? நமது வேவுப் படை என்ன ஆயிற்று?'' இரைந்தான் மன்னன்.

உள்ளே நுழைந்து கொண்டிருந்த அழும்பில்வேள் அப்படியே உறைந்து நின்றார்.

''அசையும் எந்தப் பொருளும் சோழ முன்வணி வீரர்களின் அம்புகளுக்கு பலியாகின்றன பிரபு. நான் ஒருவன் மட்டுமே காயங்களுடன் உயிர் தப்பினேன்'' என்றான் வீரன்.

மன்னனிடமிருந்து உத்தரவுகள் சரமாரியாகப் பிறந்தன. அம்பு விசிறும் தேர்களை அதிகமாகக் கொண்டதும் அச்சம் என்பதைக் கனவிலும் அறியாததுமான அந்த மறவர் படை, துடித்து எழுந்து அணிவகுத்தது. அணிவகுப்பு வடக்கு தெற்காக மாறி நிற்கவும் தூரத்தில் புழுதியைக் கிளப்பிய படி சோழர் படை பாய்ந்து வரவும் சரியாக இருந்தது.

(தொடரும்)

# இத்தனை நாளா

# இது தெரியாமல் போயிடுச்சே!...

பணம் எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை, குழந்தைகளை நன்கு படிக்க வைக்க வேண்டும் எனத் தீர்மானித்து, பிள்ளைகளைக் கான்வென்டில் சேர்த்தோம்.

அலுவலக விஷயமாக என் கணவர் அடிக்கடி 'டூர்' போய்விடுவதால், குழந்தைகளது படிப்பு விஷயத்தில் நான்தான் கவனம் செலுத்த வேண்டியிருந்தது.



ஆனால், எனக்கு இங்கிலீஷ் அவ்வளவாகத் தெரியாத காரணத்தினால், டீச்சர்களிடம் குழந்தைகளது படிப்பு பற்றி விசாரிக்க முடியாமலும், பாட சம்பந்தமாகக் குழந்தைகள் கேட்கும் சந்தேகங்களுக்கு பதில் சொல்ல முடியாமலும் நான் பட்ட அவஸ்தை சொல்லி மாளாது.

பம்பாயிலிருந்து வந்திருந்த என் அத்தை பெண்ணிடம் இதுபற்றி பேசிக் கொண்டிருந்தபோது, "கல்யாணமாகி பம்பாய் போன புதிதில் நானும் உன்னைப் போல இங்கிலீஷ் பேச முடியாமல் திண்டாடினேன்.

விவேகானந்தா கல்வி நிலையம் பற்றி கேள்விப்பட்டு, அவர்கள் நடத்தும் "கரஸ்பான்டன்ஸ் கோர்ஸில்" சேர்ந்து இங்கிலீஷ் கற்றுக்கொண்டேன். தமிழ் நாட்டில் வசிக்கும் உனக்கு இந்த 'கோர்ஸ்' பற்றி தெரியாமல் போய்விட்டதே என்று கோபித்துக் கொண்டாள்.

உடனே, நான் விவேகானந்தா கல்வி நிலையத்திற்கு ஒரு போஸ்ட் கார்டு எழுதிப் போட்டேன்.

பயிற்சி விபரங்கள் கிடைத்த மறு வாரமே, 'கோர்ஸில்' சேர்ந்தேன்.

பாடங்கள் எல்லாம் ஈஸியா புரியற மாதிரி, ரொம்ப சிம்பிளா இருந்ததால், நேரம் கிடைக்கும் போதெல்லாம் பாடங்களைப் படிச்சு பிராக்டிஸ் செய்தேன்.

இப்போ என்னால, பயமில்லாம சகஜமா இங்கிலீஷில் பேச முடிகிறது. குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க இந்த கோர்ஸ் எனக்கு ரொம்ப 'யூஸ்ஃபுல்லா' இருக்கு.

இத்தனைநாளா இந்த கோர்ஸ் பத்தி தெரியாம போயிடுச்சேன்னு வருத்தமா இருந்தாலும், இப்போவாவது இந்த கோர்ஸ்ல சேர்ந்து இங்கிலீஷ் பேசக் கத்துக்கிட்டோமேன்னு ரொம்ப சந்தோஷமா இருக்கு. – Mrs. துர்கா பிரசாத்

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"
இன்றே தொடர்பு கொள்ளுங்கள்.



## விவேகானந்தா கல்வி நிலையம்

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-17.

ஊர் மாறியிருந்த போதும் கோவில் மாறவில்லை. கருணை பொங்கும் கண்க ளுடன் அதே முருகன்.

நான் படி ஓரமாக உட் கார்ந்து கொண்டேன்.

பத்து வருடங்கள்... எவ்வளவு வேக மாக ஓடியிருக்கிறது? நான் வடம் பிடிக்கா மல் பத்து முறை தேர் ஓடியிருக்கிறது. ஒரு முறை முருகனுக்குக் கும்பாபிஷேகம் நடந் திருக்கிறது.

குருக்கள் படி ஏறி வந்தார். அவரை உற்றுப் பார்த்தேன். அவர்தான். அதே குருக் கள்தான்.

''பெயர் நட்சத்திரம் சொல்லுங்கோ...''

''கருணா, திருவாதிரை.''

நினைவில் வைத்திருப்பாரா...?

என்னைப் பார்வையால் தடவியவர், முகத்தில் எவ்வித உணர்ச்சியும் காட்டாமல் படி ஏறிக் கோவிலுக்குள் சென்றார்.

மறந்து விட்டார். நான்கு வருடங்கள் தினமும் மாலை கோவிலுக்கு வந்து விபூதி வாங்கிய என்னை மறந்து விட்டாரா...?

அப்படியென்றால் கருணா...?

டீ.வி. சரியாத் தெரியலையாண்டா... மெக் கானிக் தேடிக்கிட்டு இருக்காங்க... ஒனக்குத் தான் டீ.வி. ரிப்பேர் தெரியுமே... போயி என்னன்னு பாரு...''

நான் சுவாரஸ்யமின்றி அம்மாவைப் பார்த்தேன். இரண்டு தினங்களுக்கு முன் தான் குடி வந்திருக்கிறார்கள். முற்றிலும் அறிமுகம் இல்லாதவர்கள். அங்கு போய்...

''போடா.. ஒனக்கும் கத்துக்கிட்ட மாதிரி இருக்கும்ல...''

அம்மா அதட்ட, போனேன்.

அந்த அம்மா ''வாங்க தம்பி'' என்று டீ.வியை காண்பித்தாள்.

பட்டனைத் தட்டினேன். டீ.வி. உயிர் பெற்று, ''ஷ்...'' என்றது. டீ.வி.யில் ரிப் பேர் ஏதுமில்லை என்று பட்டது.

மாடிக்கு வந்தேன். தடுப்புச் சுவரின் மீது ஏறி நின்று கொண்டு ஆன்டெனாவின் எலிமெண்டுகளை சரியாகத் திருப்பி.. பூஸ் டரின் ஒயரை லேசாக இழுத்துப் பார்த் தேன். ஒயர் கையோடு வந்தது.

உடன் ஒயரை சரியாக வைத்து முறுக்க... கீழே வந்து டீ.வியை ஆன் செய்ய... பளிச்சென்று படம்...

# நினைவெல்லாம் உன்னோடு

மறந்திருப்பாளா என்ன...?

நினைத்த எனக்குச் சிரிப்பு வந்தது. அவள் என்னை நினைத்தாளா என்றே தெரி யாத போது மறந்திருப்பாள் என்று எப்படிச் சொல்ல முடியும்?

நான் மறக்கவில்லை. மறக்க முடியுமா அவளை? மறக்கக்கூடிய முகமா அது?

கருணா... எங்கிருப்பாள்? இப்போது எப்படியிருப்பாள்? கல்யாணமாகிக் குழந்தை பெற்று, உடல் குலைந்து, அழகு கரைந்து, முகம் முதுமை கட்டி... மாறி யிருப்பாளா...?

'உன் ஆளை இப்போதெல்லாம் வெளி யில் பார்க்க முடியவில்லை' என்று பாஸ் கரன் ஒரே ஒரு கடிதம் போட்டான். அதற்குப் பின் அவனிடமிருந்து கடிதம் ஏதுமில்லை.

கருணா!

''தம்பி ராஜா... எதிர்த்த வீட்டுக்குப் புதுசாக் குடி வந்திருக்கிறவங்க வீட்டுல

''அம்மா படம் சூப்பராத் தெரியுது.''

அறையிலிருந்து வெளியே வந்த அவள் சந்தோஷமாய்க் கத்த... நான் அவளைப் பார்த்தேன். பார்த்த அந்த விநாடியில் நிலை குலைந்தேன்.

அன்றிலிருந்து எனக்குக் காதல் ஜுரம் ஏற்பட்டது. அடிக்கடி ஜன்னல் முன் நின்று எதிர் வீட்டை பார்க்கத் தொடங்கினேன். அம்மா மூலம் அவள் பெயர் கருணா என்று தெரிந்து கொண்டேன்.

அவள் இந்தி படிக்க தினமும் காலை வீட்டிலிருந்து புறப்பட்டு, தெரு தாண்டிக் கண்களிலிருந்து மறையும் வரை இமைக் காமல் பார்த்தேன்.

குனிந்த தலை நிமிராமல் அவள் செல் லும் அழகு...

அ ப் ப டி யே

திருவாரூர் பாபு





பார்த்துக் கொண்டே இருக்கத் தூண்டும் பேரழகு. பார்த்துக் கொண்டே இருந்தேன்.

அப்படிப் பார்க்கும்போதெல்லாம் மனத்தில் காதல் பொங்கிற்று. சந்தோஷத்தில் நெஞ்சு கனத்தது. பொங்கிய காதலை எப்படி அவளுக்கு உணர்த்துவது என்று தெரியவில்லை. பார்த்துச் சிரிக்கலாம் என்றால் என்னை அவள் நிமிர்ந்து பார்க்கவேயில்லை. என்னை மட்டுமல்ல... யாரையுமே. எப்போதாவது அவள் வீட்டு ஜன்னலில் தெரியும் முகம் அவளுடையதா... அவள் தங்கையுடையதா என்பதில் குழப்பமிருந்தது.

தவியாய்த் தவித்த எனக்கு, என்னை அவளுக்கு எப்படி உணர்த்துவது என்று புரியவில்லை. கடிதம் எழுதித் தெரு தாண்டி ஆள் சந்தடி இல்லாத அடுத்த தெரு வழியாகத் தையல் வகுப்புக்குச் செல்லும் போது கொடுக்கலாம் என்றால்... பயம். பயம்.... பயம்...

காதலிக்கும் போது ஏனோ தெரியவில்லை. கடவுள் நினைவு அதிகமாய் வருகிறது. நினைத்தது நடக்க வேண்டும் என்கிற போது கடவுளின் துணையும் அதற்கு அவசியமாய்ப் படுகிறது. மனம் உருக பிரார்த்தித்தால் கடவுள் ஏதாவது வழி செய்வாரோ என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. நான் தினமும் மனம் உருகப் பழனியாண்டவரை வணங்க ஆரம்பித்தேன்.

அப்படி வணங்கும்போதுதான் மாட்டிக் கொண்டேன்.

“தம்பி எதிர்த்த வீட்டுக்கு ஒரு ஜாதகக்காரரு வந்திருக்காரு... ஒன் ஜாதகத்தை எடுத்துட்டுப் போறேன்... என்ன சொல்றாருன்னு பார்ப்போம்... நான் வர்ற வரைக்கும் வீட்லயே இரு.”

அம்மா ஜாதகம் பார்த்து விட்டுத் திரும்பி வந்து மேஜை மேல் வைத்திருந்த ஜாதக நோட்டைப் புரட்ட... உள்ளே கருணாவின் ஜாதகம்! எப்படி? தெரியாமல் வந்து விட்டதோ... அவசரமாய்ப் பார்வையை அதில் போட்டேன். திருவாதிரை நட்சத்திரம்... மிதுன ராசி.

''லெட்சுமியம்மா... எங்க கருணா ஜாதகம் ஒங்க ஜாதக நோட்டோட வந்துட்டுது போல் இருக்கு... பாருங்க...'' குரல் கேட்க அவசரமாய் நோட்டை மூடி வைத்து விட்டு நகர்ந்தேன்.

அன்று கார்த்திகை.

பழனியாண்டவர் கோவிலில் கூட்டம் பிதுங்கியது.

வழக்கமாக அர்ச்சனை செய்யும் அப்பா ஊரில் இல்லாததால் அர்ச்சனைத் தட்டோடு நான்.

கூட்டம் கொஞ்சம் குறைந்து, ''தம்பி... தட்டக் கொடுங்கோ...'' கொடுத்தேன். வாங்கியவர், ''பேர்... நட்சத்திரம் சொல்லுங்கோ...''

பளிச்சென்று எனக்குள் ஒரு மின்னல். வழக்கமாகச் சாமி பெயருக்கு அர்ச்சனை செய்யும் நான் மெல்லிய குரலில் சொன்னேன் : ''கருணா... திருவாதிரை.''

அர்ச்சகர் மந்திரம் சொல்ல... நான் கண் மூடி நின்றேன். மனம் கருணா... கருணா... என்றது. முகத்திற்கு முன் அக்னி உணர்ந்து, தீபத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டு, டோக்கன் நம்பர் சொல்லி அர்ச்சனைத் தட்டை வாங்கிக் கொண்டு திரும்பிய நான்... அதிர்ந்தேன்.

எதிரே என்னையே பார்த்தபடி கருணாவின் அண்ணன்!

நான் எதிர்பார்த்தது அன்று இரவு நடந்தது.

''ஒனக்கும் அவனுக்கும் என்னடி சம்பந்தம்... ஒன் நட்சத்திரம் எப்படி அவனுக்குத் தெரியும்... நம்ம ஜாதி என்ன... அவன் ஜாதி என்ன... ஆசைப்பட்டியேன்னு இந்தி படிக்க அனுப்புனதுக்கு நீ செஞ்சிருக்கிற வேலையாடி இது?''

கருணாவின் அழுகைச் சப்தம் தெரு தாண்டி என் செவிகளில் அமிலமாய்ப் பாய்ந்தது. மனம் பதைத்தது. 'அவளுக்கு ஏதும் தெரியாது. நான்தான்' என்று கத்த வேண்டும் போல் இருந்தது. எதிர்த்த வீடு, அடுத்த வீடு எல்லாம் வாசலில் நின்று கொண்டு சுவாரஸ்யமாய்...

''என்னடா எதிர்த்த வீட்டுல அந்த தம்பியோட சப்தம் மாதிரி இருக்கு...'' அம்மா ஆர்வமாய் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். நான் தவித்தேன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் வீட்டுக் கதவு தட்டப்பட்டது. தயக்கமாய்த் திறந்தேன்.

பளிச்சென்று முகத்தில் அறை விழுந்தது. ''என்னடா... என்னடா...'' அம்மா பதறினாள்.

அவன் ஆவேசமாய்க் கத்தினான். ''தப்பு லெட்சுமியம்மா... உங்கள எங்கள்ல ஒருத்தரா நினைச்சிருந்தோமே அது தப்பு.. எங்க பொண்ணை மயக்கிப் போடத்தான் இந்த மாதிரி பழகினீங்களா...?''

''என்னப்பா சொல்ற...?'' என்றாள் அம்மா குழப்பமாய்.

''ஒங்க பையனையே கேளுங்க...''

''ஏய்... என்னடா... என்னடா இதெல்லாம்... எனக்கு ஒண்ணுமே புரியலியேடா... சொல்லு...'' அம்மா கத்தினாள்.

நான் அமைதியாக இருக்க... ''அவன் சொல்ல மாட்டான் லெட்சுமியம்மா. ஒங்க பையன் என் தங்கச்சி பேருக்குக் கோவில்ல அர்ச்சனை பண்றான்...''

அம்மா என்னை நெருங்கி வந்து பளாரென்று அறைந்தாள்.

அப்போதுதான் வீட்டுக்குள் நுழைந்த அப்பா, ''குடும்ப கௌரவத்தையே கெடுத்திட்டியேடா'' என்றார் பற்களைக் கடித்தபடி.

''தெரியும்டி... ஒம் புள்ள இந்த மாதிரி ஏதாச்சும் பண்ணுவான்னு தெரியும்டி... பத்து வருஷமா தலை நிமிர்ந்து நடந்துக்கிட்டு இருந்தோம்.. எல்லாம் போயிட்டு



''நீங்க ஏன் உங்க தொகுதியிலே அந்த நடிகையைத் தேர்ந்தெடுத்தீங்க?''

''தேர்தலிலே தோற்றுப் போயிட்டா மீண்டும் நடிக்க வந்துடுவேன்னு பயமுறுத்தி இருந்தாங்களே!''

- ஆர். ஆர். பூபதி

# 21 விதமான பலன்கள் பெற

21 விதமான பத்ரங்களைக் கொண்டு பிள்ளையார் சதுர்த்தி அன்று பூஜை செய்ய வேண்டும்.

பத்ரங்கள்: 1. முல்லை இலை; 2. கரிசிலாங்கண்ணி இலை; 3. வில்வம்; 4. வெள்ளருகம்புல் வேரோடு கூடியது; 5. இலந்தை இலை; 6. ஊமத்தை இலை; 7. துளஸி; 8. வன்னி இலை; 9. நாயுருவி இலை; 10. கண்டங் கத்திரி இலை; 11. அரளி இலை; 12. எருக்கிலை; 13. மருதை இலை; 14. விஷ்ணுக்கிராந்த இலை; 15. மாதுள இலை; 16. தேவதாரு இலை; 17. மருவு; 18. அரச இலை; 19. ஜாதி மல்லிகை இலை; 20. தாழை இலை; 21. அகத்திக் கீரை இலை.

பலன்கள்: 1. தர்மம்; 2. பொருள்; 3. இன்பம்; 4. ஸௌபாக்யம்; 5. கல்வி; 6. பெருந்தன்மை; 7. நலவாழ்வுடன் கூடிய மோக்ஷம்; 8. முகத்தில் பால் வடியும் தன்மை; 9. வீரலக்ஷ்மி கடாக்ஷம்; 10. விஜயலக்ஷ்மி கடாக்ஷம்; 11. எல்லோரும் தன்னிடம் அன்பாயிருக்கும் தன்மை;*12. குடும்பத்தில் கர்ப்பாரக்ஷை; 13. மக்கட்பேறு; 14. நுண்ணறிவு; 15. நற்புகழ்; 16. சோகத்தினால் வாடாத்தன்மை; 17. அசுபங்களை அகற்றல்; 18. தன் வாக்கிற்கு எதிர் வாக்கு அடங்கிப் போதல்; 19. கோபம் கொண்டவர் களைச் சாந்தப்படுத்தும் தன்மை; 20. பிறர் ஏவும் ஆபிசாரம் அடங்கு தல்; 21. துயர் தீர்தல்.

"உங்க சினிமா மார்க்கெட் 'டல்' அடிச்சிருச்சே, உங்க அடுத்த திட்டம் என்ன?"

"டீ.வி. நாடகங்களிலே நடிச்சு, ரசிகர்களைப் பழிவாங்கப் போறேன்!"

- கு. அருணாசலம்



துடி.. இனிமே ஒரு நாள் இந்த வீட்டுல இருக்கக்கூடாது. நாளைக்கே டிரான்ஸ்ஃபர் கேட்கிறேன்.. வீட்டைக் காலி பண்ணிட்டு டிரான்ஸ்ஃபர் கிடைக்கிற ஊருக்குப் போயி டலாம்... இந்தத் தெரு பக்கம் இனிமே நடமாட முடியாதுடி... ஒருத்தன் மதிக்க மாட்டான்..."

அடுத்த வாரமே வீட்டைக் காலி செய்தோம்.

தஞ்சாவூருக்கு வந்த இரண்டாம் நாளே நான் டெல்லி கிளம்பினேன்.

அம்மா அழுதாள். அப்பா திட்டினார்.

"உள்ளூர்ல விலை போகாத மாடு.. வெளியூர்ல எப்படிப் போகும்? தொரை டெல்லி போயி எவகிட்டயாவது வம்பு பண்ணப் போறாரு... கட்டுக் கொன்னுடு வானுவோடி..."

நான் அப்பாவைப் பொருட்படுத்தாமல் புறப்பட்டேன். டெல்லி வந்தேன். காதலால் காயப்பட்ட மனம்... பணம் பணம் என்று அலைந்தது. பல டீ.வி. கம்பெனி ஏறி இறங்கினேன். நண்பனின் உதவியோடு ஒரு டீ.வி. கம்பெனியில் மெக்கானிக் உத்யோகம் கிடைத்தது. மனசை முழுக்க முழுக்க அதில் திருப்பினேன். வெறியோடு உழைத்தேன்.

மெக்கானிக்... சீனியர் மெக்கானிக்... ஃபோர்மேன்... ஃபேக்டரி இன்சார்ஜ்... பணம் கொட்டியது. நான் வாழ்க்கையில் சம்பாதிக்கவே முடியாது என்று நினைத்திருந்த அளவை விட அதிகமாகச் சம்பாதித்தேன்.

அம்மாவையும், அப்பாவையும் டெல்லிக்கு அழைத்துக் கொண்டேன். அம்மா வசதி பார்த்து மிரண்டாள். அப்பா அசந்தார்.

"ஏண்டா இன்னும் கல்யாணம் பண்ணிக்கல... எவளையாக்கம் பண்ணியிருப்பேன்னு நினைச்சிக்கிட்டு இருந்தேன்... ஏண்டா... நம்ம வம்சத்துக்கே வாரிசு இல்லாம போயிடும் போலிருக்கே..."

"கருணா" என்றேன்.

"இன்னும் அவளை மறக்கலியாடா...?" அம்மா திகைப்பாய்க் கேட்டாள்.

"எனக்கு ஒரு தடவை அவளைப் பார்க்கணும்மா... என்னை அவ விரும்பினாளான்னு தெரியணும்மா... என் மனசு முழுக்க இன்னும் அவ இருக்காம்மா. என்னால அவளை மறக்க முடியலம்மா... நான் பட்ட அவஸ்தையை அவ பட்டாளான்னு கேட்கணும்மா... ஊருக்குப் போறேன்."

"இன்னுமாடா அவ அங்க இருப்பா... கல்யாணம் ஆகிப் புருஷன் குழந்தைன்னு வேற ஊர்ல இருப்பாடா... விளையாட்டுத் தனமா எதையாச்கம் பண்ணிடாதே... பெண் பாவம் பொல்லாததுடா..."

ஆனாலும் நான் புறப்பட்டு வந்தேன். உடன் கோவிலுக்கு வந்தேன்.

மணி ஒலித்தது.

கன்னத்தில் போட்டுக் கொண்ட போது தான் எனக்கு நினைவு வந்தது. ஆகஸ்டு 12... அட! இன்று என் பிறந்த நாள் அல்லவா...? ஓர் அர்ச்சனை செய்தால் என்ன...?

எழுந்து படி இறங்க எத்தனித்த போது தான்... தொலைவில் சன்னதித் தெருவிலிருந்து... அவள்... கருணா... கருணா...

என் இதயம் படபடவென துடிக்கத் தொடங்கியது. கண்கள் தூரத்தில் வரும் அவளையே வெறித்தது. அதே நடை. அதே குனிந்த தலை. கருணா... கருணா... வா கருணா... வா!

வந்தாள்.

நான் பட்டென்று தூணுக்குப் பின்னால் என்னை மறைத்துக் கொண்டு அவளை முழுமையாகப் பார்த்தேன்.

கண்கள் முதலில் அவள் கழுத்தைத் தான் பார்த்தன. கழுத்தில் தாலி இல்லை. காலில் மெட்டி இல்லை. முகத்தில் முதுமை இருந்தாலும் அதையும் மீறிச் சோகம் இருந்தது. உடம்பு கொஞ்சம் குண்டாகி... ஆனந்தத்தில் என் கண்களில் கண்ணீர் திரண்டது. நெஞ்சு பொங்கியது. கை கால் நடுங்கியது. சப்தம் போட்டு ஓவென்று அழுதால் தேவலாம் போல் இருந்தது.

கருணா கண் மூடி நின்றாள்.

குருக்கள் அவள் முன் வந்து நின்றார்.

அர்ச்சனைத் தூக்கை நீட்டினாள். வாங்கிக் கொண்டவர், "பேர்... நட்சத்திரம் சொல்லுங்கோ..."

கருணா சொன்னாள் :

"ராஜா... மகம்..."

# மடிமீது தலைவைத்து 6

**ஐந்து அத்தியாயங்களில் அளிக்கப்பட்ட அவியல் :**

கடற்கரை ஓரத்தில் சபரி என்னும் உணவு விடுதியை நடத்தி வரும் 'ரங்கா' எனும் கஸ்தூரிரங்கன் இளைஞன். அவனது உணவு விடுதியில் சமைப்பதற்கு வாழ்க்கையில் அனுபவம் நிறைந்த பாட்டிகள். கறுகறுப்புடன் பரிமாற பன்னிரண்டு, பதினான்கு வயதுச் சிறுவர்கள். புதுப்புதுப் பெயர்களில், சத்தான உணவுகளைத் தயாரித்து அளிக்க நளராஜன் என்றழைக்கப்படும் நடராஜன். சபரி நடமாடும் உணவகமாக ஒரு வேன்.

ரங்காவின் உணவு விடுதி பற்றிக் கேள்விப்பட்டு கல்லூரி மாணவி சுகிதா வருகிறாள். வசீகரமானவள். அவள் கல்லூரியில் ஏற்பாடு செய்திருக்கும் ஒரு பிரிவு உபசார விழாவிற்கு உணவு வழங்க அவனை ஏற்பாடு செய்கிறாள்.

ரங்கா தன் பட்டாளத்துடன் போகிறான். விழா நடக்கும் மைதானத்தில் ஸ்பிரிட் அடுப்புத் தீயில், ஒரு பேராசிரியையின் குழந்தையின் துணி பற்றிக் கொள்கிறது. ரங்கா பாய்ந்து தீ அணைத்து விபரீதம் தடுக்கிறான். குழந்தையையும், பேராசிரியையும் வீட்டில் விட்டுத் திரும்புகிறான்.

நன்றி சொல்ல மறுநாள் சுகிதா அவனைத் தேடி வருகிறாள். சாப்பிட்டுக் காசு கொடுக்காமல் செல்லப் பார்க்கும் சிறுவனை விசாரித்து அவனுக்குச் சுண்டல் விற்கும் வேலை தரும் ரங்காவையும், அவனது விசாலி, காவேரி, நளராஜன் குடும்பத்தையும் கண்ட சுகிதா நெகிழ்ந்து போகும் வேளையில் -

'மிஸ்டர் ரங்கன்' என்று அழைத்துக் கொண்டு ஒருவன் வருகிறான். அவன் பதற்றமாய் இருக்கிறான்.

'அவசரம், அவசரம்' என்கிறான் வந்தவன்.

அவனைக் கண்டு, ரங்காவின் முகம் புன்னகையை இழக்கிறது. கொஞ்சம் அசிங்கமாக மாறுகிறது.

இனி -

சுபா

திடீரென்று கரடி போல் வந்து நின்று, 'அவசரம், அவசரம்' என்று கூறிய அந்த ஆளைப் பார்த்தாலே அவளுக்கு வெறுப்பாக இருந்தது.

ரங்கா 'கெட்-அவுட்' என்று சொல்லப் போகிறான் என்று நினைத்தாள். ஆனால் -

கஸ்தூரிரங்கன் அவளிடம் முனகலாக ஒரு 'எக்ஸ்க்யூஸ் மீ'யை உதிர்த்து விட்டு, அந்த சமையலறையை விட்டு வெளியேறினான்.

திடீரென்று நடுக்காட்டில், பாலைவனத்தில் அவளை விட்டு விட்டு அவன் போய் விட்ட மாதிரி சுகிதாவிற்குப் பட்டது. கஸ்தூரிரங்கன் மேல் கொஞ்சம் கோபம் கூட வந்தது. அடுத்தகணமே அவள் வெட்கப்பட்டாள். அவன் மேல் எதற்குக் கோபம் வர வேண்டும்? அவளை அவன் 'நீரும், நெருப்பும்' என்று சொன்னது ரொம்ப சரியாகத்தான் இருக்கிறது.

அவள் நிலைகொள்ளாமல் நிற்பது கண்டு, விசாலிப் பாட்டி அவளருகே வந்தாள்.

''ரங்கா இப்ப வந்துடுவான்.''

''ம்'' என்றாள்.

''ஒனக்குக் கல்யாணம் ஆய்டிச்சா?''

''இல்ல பாட்டி.''

''எங்க ரங்காவுக்குக் கூடக் கல்யாணம் ஆகல்ல.''

''நான் கேட்டேனா பாட்டி?''

''நீ கேக்கல. ஆனா எனக்குத் தெரிஞ்சிக்க முடிஞ்சது.''

''என்ன தெரிஞ்சிக்க முடிஞ்சது?''

''நெஜமாத் தூங்கறவங்களை எழுப்பறது ரொம்ப சுலுவான விஷயம். தூங்கற மாதிரி காட்டிக்கறவங்களை எழுப்பறதுதான் கஷ்டம். ஏண்டி பொண்ணே, என் வயசு என்ன? என் வயசுல நான் எவ்வளவு பாத்திருப்பேன்?''

சுகிதாவிற்கு அந்தப் பாட்டியை மட்டம் தட்டிப் பேச வேண்டும் போல் இருந்தது. எப்படி அந்தப் பாட்டி அவள் மீது இவ்வளவு உரிமை எடுத்துக் கொள்ளலாம்?

அவள் வாய் திறந்து பேசுவதற்குள் கஸ்தூரிரங்கன் திரும்பி வந்து விட்டான். அவன் முகத்தில் சோர்வு இருந்தது. விரும்பத்தகாத ஒரு கடுகடுப்பு இருந்தது. ''அப்புறம்?'' என்று சுகிதாவைப் பார்த்துச் சொன்ன சொல்லில் அமிலம் இருந்தது.

சுகிதா உடனே கிளம்பி விட்டாள்.

சுகிதாவின் மனம் பாலைவனக் காற்று போல் ஓர் இலக்கு இல்லாமல் அலைந்தது.

சபரிக்குப் போன போது, அவளைப் பார்த்த முதல்

கணத்தின் போது 'ரங்கா' எவ்வளவு மகிழ்ச்சியாய்த் தெரிந்தான்? உற்சாகமாய்த் தெரிந்தான்? அவள் வரவைப் பார்த்தவுடன் அவன் முகத்தில் தெரிந்த புதிய ஒளி, அவளுக்குக் கூட மகிழ்ச்சியை வாரி வழங்கியது.

ஒருவனுடைய வாழ்வின் முன்னேற்றமும், மகிழ்ச்சியும் அவனுடைய கல்வி, செல்வம் ஆகியவற்றில் மட்டும் இல்லை. பண்பிலும், சுறுசுறுப்பிலும் இருக்கின்றன. ஒருவனது சுறுசுறுப்பான நடைமுறையும், சிறந்த பண்பு நலமுமே அவனை



வாழ்வில் முன்னேறியவனாகவும், மகிழ்ச்சி நிறைந்தவனாகவும் மாற்றுகின்றன.

ரங்காவின் சுறுசுறுப்பும், முதல் முதலாக அவளைச் சந்தித்த அன்றைக்கு, அவளை அவன் உபசரித்த விதமும், மென்தொனிப் பேச்சுமே அவனை மகிழ்ச்சியுடையவனாகக் காட்டுவதாக அவள் நினைத்தாளே. அவனுடைய கல்வி, செல்வம் ஆகியவை பற்றி ஒரு விவரமும் தெரியாத போதும் அவனை வாழ்வில் முன்னேறியவனாக அவள் நினைத்தாளே. அதெல்லாம் பொய்யாகி விடுமா என்ன?

காக தராமல் சாப்பிட்ட பையனை அவன் கட்டி வைத்து உதைக்கப் போகிறான் என்று எண்ணிய போது, அந்த மணி வாசகத்திற்கு வாழ்க்கையில் ஒரு வழி அமைத்துக் கொடுத்தவன் என்பதைக் கண்கூடாக அறிந்த போது, அவன் அவள் மனத்தில் பன்மடங்கு உயர்ந்து போனானே!

இத்தனையும் மீறி அவனுக்கென்று ஓர் இருட்டுப் பக்கம் இருக்கிறதா? ரங்காவைத் தேடி எவனோ ஒருவன் வந்தானே! பார்த்தாலே விலகிப் போகும் படியான முக அமைப்புடன் இருக்க அவனுக்கு ரங்காவிடம் என்ன வேலை?

வெறும் 'ஹோட்டல் உரிமையாளன் - வாடிக்கையாளன்' என்ற உறவு முறைதான் என்றால், அவனைப் பார்த்தவுடன் போலீஸ்காரனைப் பார்த்த திருடன் போல ரங்காவின் முகம் மாற வேண்டிய காரணம் என்ன?

விருந்தாளியாய் வந்திருக்கும் அவளை விட அவன் முக்கியமாய்ப் போய் விட்டானா? எதற்கு அவசர அவசரமாக வந்தவன் பின்னால் ஓட வேண்டும்? போனது போனான். சரி. அவர்களுக்குள் ஆயிரம். ஆண் பிள்ளைகள் என்ன வேண்டுமானாலும் பேசிக் கொள்வார்கள். ஆனால் திரும்பி வந்த போது ஏன் அவ்வளவு எரிச்சல் முகத்துடன் அவன் வர வேண்டும்? என்னவோ அவள் கண்டு கொண்டிருந்த நல்ல கனவின் குறுக்கே, அவன் வந்து விழுந்து விட்ட மாதிரி, 'அப்புறம்?' என்று அமிலம் தெறிக்க ஏன் வினவ வேண்டும்?

எப்படியாவது போய்யா. எனக்கும்

உனக்கும் இடையில் என்ன இருக்கிறது?

'எங்க ரங்காவுக்குக் கூட கல்யாணம் ஆகல்ல.'

அந்த விசாலிப்பாட்டியின் நாக்கைச் சூட்டுக்கோலால் ஓர் இழுப்பு இழுக்க வேண்டும் போல் இருந்தது சுகிதாவிற்கு.

தொலைபேசியின் செல்லமான 'கிணுகிணு' கஸ்தூரிரங்கனுக்குக் கொஞ்சம் இடையூறாகவே இருந்தது. வியாபாரத்தின் உச்சக்கட்ட நேரத்தில் சில தப்பு அழைப்புகள் அவனை எரிச்சலடையச் செய்யும்.

சற்று நேரம் அவன் பிடிவாதமாக இருந்தான். பையன்கள் யாராவது எடுப்பார்கள் என்று எதிர்பார்த்தான். எல்லோரும் எறும்புகளாக இயங்கிக் கொண்டிருந்தார்கள். அவனே எடுத்து, ''ஹலோ'' என்றான்.

''என்னை உங்களுக்கு ஞாபகம் இருக்கோ இல்லையோ...''

''சுகிதா'' என்றான் ஆச்சரியத்துடன். மகிழ்ச்சியுடன். திடீரென்று தான் அப்படி உணர்ச்சிவசப்பட்டதை யாராவது பார்த்து விட்டார்களா என்று அறிய, பார்வையை மெல்ல சபரியைச் சுற்றி புகையாக அலைய விட்டான்.

''பரவால்ல. ஞாபகம் இருக்கு.''

''என்ன சுகிதா இது? உங்களை மறக்க முடியுமா?''

''உங்களுக்கு எவ்வளவோ பேர். யாரைன்னு ஞாபகம் வச்சிப்பீங்க?''

''ஏதோ கோபத்தில இருக்கீங்கன்னு நெனக்கறேன்.''

''சேச்சே. நான் யாரு உங்களைக் கோச்சுக்க. பொதுவா பொண்ணுன்னா பேயும் இறங்கும்னு சொல்வாங்க. உங்களுக்கு தடி, தடியா, கறுப்பா, ஒயரமா ஆம்பளைங்க வந்தாலே மனசு கரைஞ்சிடுது. பக்கத்துல உங்களைப் பாத்துப் பேசிட்டுப் போறதுக்காக வந்து காத்துக்கிட்டிருக்கற பொண்ணைக் கூட மறந்துடுவீங்க.''

''ஓ... அன்னிக்கு என்னைத் தேடிட்டு வந்தவரைப் பத்திச் சொல்றீங்களா? ஸாரி சுகிதா. அன்னிக்கு வந்த ஆள் என் ஃப்ரண்ட் தான். ஆள்தான் பாக்கறதுக்குக் கொஞ்சம் பலாப்பழம் மாதிரி கரடுமுரடாத் தெரிவானே தவிர மத்தபடி நல்லவன்தான். எங்க சபரியோட ரெகுலர் கஸ்டமர் ஒருத்தர் திடீர்னு இறந்து போய்ட்டார். அதைச் சொல்றதுக்காகத்தான் வந்திருந்தான். அவசரமான பணத் தேவை. கொடுத்தனுப்பினேன். அதனால எனக்கு மூட் அவுட் ஆயிடிச்சி.''

''ஸாரி ரங்கா. என்ன விஷயம்னு தெரிஞ்சிக்காமயே உங்க மேல இருக்கற கோபத்தைக் குத்தலா சொல்லிக் காமிச்சிட்டேன்.''

''அதான் நீரும் நெருப்பும்னு எனக்குத் தெரியுமே.''

''க்ளுக்.''

''இதுக்காகத்தான் ஃபோனா?''

''ஐயோ. மறந்தே போய்ட்டேன் பாத்தீங்களா? நாளைக்கு எங்க வீட்ல வெட்டிங் ஆனிவர்சரி.''

''யாருக்கு?''

''ஏன் பதற்றப்படறீங்க ரங்கா? வெட்டிங் ஆனிவர்சரி அப்பாவுக்குத்தான்.''

''ஹப்பாடா.''

''ஏன்? எதுக்காக இந்தப் பெருமூச்சு? எதுக்காக இந்த 'ஹப்பாடா?''

''பின்ன. உங்களுக்கு வெட்டிங் ஆனிவர்சரின்னு சொல்லியிருந்தீங்கன்னா என்ன ஆறதாம்?''

''ஏன்? என்ன ஆய்டும்?''

''உங்க கல்யாணத்துக்கு நான்தான் எல்லாருக்கும் சாப்பாடு போடணும்னு நெனைச்சிக்கிட்டிருந்தேன். ஒரு ஃபர்ஸ்ட் கிளாஸ் பிஸினஸ் போய்டுமே.''

''அவ்வளவுதானா?''

''ஹோட்டல்காரனுக்கு வேற என்ன? சரி. அப்பாவுக்கும் அம்மாவுக்கும் வெட்டிங் ஆனிவர்சரி. நான் என்ன செய்யணும்? அப்பா அம்மாகிட்டே என் வாழ்த்துக்களைச் சொல்லுங்க.''

''நீங்க எங்க வீட்டுக்கு வரணும்.''

''சபரியை விட்டுட்டா?''

''ஒரு இருபத்தி அஞ்சி பேருக்கு விருந்து சாப்பாடு தயார் பண்ணிக் கொண்டு வாங்க ரங்கா.''

''அவ்வளவுதானே. ஜமாய்ச்சிடலாம். அட்ரஸ் சொல்லுங்க.''

சேத்துப்பட்டின் கறுகறுப்பிலிருந்து விலகி, அமைதி காத்த அந்தத் தெருவில் வேப்பமரமும், அசோகமரமும் சுவரோரம் வளர்ந்திருந்த வீட்டு வாசலிலேயே சுகிதா முகம் நிறையச் சிரிப்புடன் நின்றிருந்தாள்.

ரங்கன் வீட்டு வாசலில் பக்கம் பார்த்து, தான் ஓட்டிக் கொண்டு வந்த டெம்போவை நிறுத்தினான். டெம்போவின் பின் கதவைத் திறந்து கொண்டு நகுல, சகாதேவர்கள் இறங்கினார்கள்.

''உள்ள வாங்க ரங்கா'' என்றாள் சுகிதா.

உள்ளே நுழைந்தான். ஒரு பருத்திப் புடைவைக்காரி எதிர்ப்பட்டாள். ரங்காவைப் பார்த்துக் கைகூப்பினாள். ரங்கனும் சிரித்துக் கைகூப்பினான்.

''இது தங்கம். சபரியில விசாலி, கோமதி, காமுன்னு ஒரு படையே இருக்குல்லியா? இங்க தங்கம் மட்டும்.''

வீடு வசதியாக, பெரியதாக இருந்தது. கூடத்திலிருந்து மேல்நோக்கிச் சென்ற மாடிப்படிகள். ஆளுயரக் குத்துவிளக்கு. முகம் தெரிந்த தரை. சுவர் தழுவிய தஞ்சாவூர்ச் சித்திரம். நாசி தழுவிய சாம்பிராணி,

மனுஷனா பொறந்தவன் செத்ததுக்கப்புறமும் அவன் பேர் சொல்ற மாதிரி
இந்த உலகத்துல எதையாவது செய்துட்டு போகணும்...
இந்த உலகத்துல எதையாவது நட்டுட்டு போகணும்.
அட்லீஸ்ட்... ஒரு மரத்தையாவது நட்டுட்டு போகணும்.
சத்திரியனா இருக்காதே சாணக்கியனா இரு!

சபையர் 70mm A/c 3 காட்சிகள்
அலங்கார் A/c (12.15 மணி காட்சி)
சங்கம் A/c 4 காட்சிகள்
உதயம் A/c 3 காட்சிகள்
பாண்டியன் 4 காட்சிகள்
மற்றும் தமிழகமெங்கும்



## அடுத்த இதழில்...

●● மண்டை பிளக்கும் மத ஊர்வலங்கள்!

*- கவர் ஸ்டோரி*

●● சேவா நடக்கிறது; உலகம் வியக்கிறது!

*- ஸ்பெஷல் ரிப்போர்ட்*

ஊதுவத்தி மணம். தூக இல்லை. தும்பு இல்லை. கஸ்தூரிரங்கன் கொண்டு வந்திருந்த சாப்பாட்டைச் சாப்பிடுவதற்காகவும் யாரும் அங்கே இருந்த மாதிரி தெரியவில்லை.

கஸ்தூரிரங்கன் அலங்காரத் தாள் சுற்றிக் கொண்டு வந்திருந்த வெள்ளிக் குங்குமச் சிமிழை பாக்கெட்டில் இருந்து எடுத்தான்.

''எங்க அம்மா?''

''இதோ'' என்று அவனுக்குப் பின்னால் காட்டினாள் கீதா.

திரும்பினால் சுவரில் படம். விளக்கு ஏற்றப்பட்டு, பூ வைக்கப்பட்டு, பொட்டு வைக்கப்பட்டு, வயது ஏறிய கீதா. புகைப் படத்திலும் அதே சிரிப்பு. கண்ணோரங்களில் அதே காக்கைக் கால்கள்.

''கீதா?'' என்றான் திகைப்புடன்.

''அம்மா போய் ஆறு வருஷம் ஆச்சி.''

''ஐ'ம் ஸாரி. ஐ'ம் வெரி ஸாரி'' என்றான். குங்குமச் சிமிழ் பெட்டியை பாண்ட் பாக்கெட்டிலேயே சரக்கென்று நுழைத்தான். ''இன்னிக்கு கல்யாண நாள்னு சொன்னீங்க.''

''அது கரெக்ட்தான். அப்பா இன்னிக்கு மட்டுந்தான் வீட்ல இருப்பாரு. அப்பா கிட்ட உங்களை அறிமுகப்படுத்தணும்னு எனக்கு ஆசை. கூப்ட்டா சபரியை விட்டு வர முடியாதுன்னு சொல்லிட்டீங்க. அதனாலதான் சட்னு பார்ட்டின்னு சொன்னேன். இதோ அப்பா.''

மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தவரைப் பார்த்தான்.

''ஹலோ. யூ மஸ்ட் பீ மிஸ்டர் ரங்கா. கீதா அடிக்கடி உங்க சபரியைப் பத்தி, உங்களைப் பத்தி சொல்லிட்டிருப்பா. எனக்கு சபரிக்கு வரணும்னு ஆசை. என் பிஸினஸ் என்னை அனுமதிக்கறதில்ல. கிரானைட் பிஸினஸ். க்வாரிக்குப் போகணும். அது ஆந்த்ரா. காங்லா ஃபாக்டரிக்குப் போகணும். அது தண்ணிப் பிரச்னை இல்லாத கேரளா. அப்புறம் கோடவுன். அப்புறம் எக்ஸ்போர்ட் பண்றதுக்காக ஃபாரின் டூர். பிஸினஸ்.''

''ஆமா. பணத்தைத் தொரத்தற பிஸினஸ்'' என்றாள் கீதா.

''எனக்கு லைஃப்ல வேறென்ன இருக்கு கீ. அம்மா இருந்தா அவ முந்தானையையாவது புடிச்சிகிட்டிருப்பேன். கம்மா இருந்தா கொரங்கு மனசு கண்டபடி அலையும். ஸோ பிஸினஸ். என்ன ரங்கா நான் சொல்றது?''

''நூறு சதவீதம் கரெக்ட் சார்.''

''யூ ஆர் மை பாய். சபரில எல்லா ஜட்டமும் நல்லா இருக்கும்னு கீதா சொல்லுவா. ஒரு நாள் வரேன்.''

''ஏன், இப்பவே சாப்பிடலாமே சார்.''

''இன்னிக்கா?''

''ஏன் சார். அதான் எல்லாம் தயார் பண்ணிக் கொண்டு வந்திருக்கோமே.''

''என்ன கீ? எதுக்கு அவரை எடுத்துட்டு வரச் சொன்னே? மிஸ்டர் ரங்கா. கீதாவுக்குக் கொஞ்சம் விளையாட்டுப் புத்தி. தப்பா எடுத்துக்க வேண்டாம். இன்னிக்கு யாருமே சாப்பிட மாட்டோம். வருஷத்தில ஒரு நாள். உண்ணாவிரதம்.''

கஸ்தூரிரங்கன் திகைத்துப் போய் கீதாவைப் பார்த்தான். அவள் கண்களாலேயே அவனிடம் மன்னிப்புக் கேட்டாள்.

''நான் கொண்டு வந்திருக்கறதெல்லாம் என்ன செய்யறது?''

''நான் பணம் கொடுத்திடறேன் மிஸ்டர் ரங்கா.''

''அதுக்கில்ல சார்.''

''வேஸ்டாயிடுமேன்னு பாக்கறீங்களா? ஒருநாள்தானே? போய்ட்டுப் போவுது.''

''சாப்பாட்டை வீணாக்கறது என்னால ஒத்துக்கவே முடியாத விஷயம். பரவால்ல. நான் உடனே புறப்பட்டா, இந்த சாப்பாட்டை பசியோட இருக்கறவங்களுக்குக் கொடுத்திடலாம்.''

''எங்கே?''

''எனக்குத் தெரிஞ்ச முதியோர் இல்லம் ஒண்ணு இருக்கு. இங்கதான் பக்கத்தில. அமிஞ்சிகரைல.''

''நானும் உங்ககூட வரட்டுமா ரங்கா?''

''வாங்களேன்.''

''வந்தவுடனேயே தொரத்தணுமா கீ? அவருக்குக் குடிக்கறதுக்குக் கூட ஒண்ணுமே கொடுக்கலை.''

''இந்தா கீதா. தம்பிகிட்ட குடும்மா.''

தங்கம் ஒரு கண்ணாடி தம்ளரில் சில்லென்று எதையோ கொண்டு வந்திருந்தாள். கஸ்தூரிரங்கன் அதைக் கையில் வாங்கினான். மாம்பழச் சாறு.

உதடு விளிம்பில் அதை வைத்த போது, வீட்டு வாசலில் வேன் டிரைவர் சிங்காரத்தின் குரல் கேட்டது.

''ரங்கா... நம்ப பாபு வேன்லேர்ந்து கீழ விழுந்து மண்டைல அடி. ஜி.எச்லே சேத்துட்டோம். எல்லாரும் அங்கதான் போயிருக்காங்க.''

கஸ்தூரிரங்கன் கையில் இருந்த கண்ணாடி தம்ளர் நழுவியது.

(தொடரும்)

# Surya Estate Finance

## ACCEPTS FIXED DEPOSITS

### (I) NARBHAVEE DEPOSITS SCHEME

**24% Per Annum**

* Amount of Deposit Rs. 1,000/- and above.
* Interest payable: Monthly/Quarterly/Half yearly/Yearly

### (II) CHOLAN REINVESTMENT SCHEME

| Amount | Gross Amount Repayable on Maturity | | | | |
|---|---|---|---|---|---|
| | 1 Year | 2 Years | 3 Years | 4 Years | 5 Years |
| 1000 | 1240 | 1540 | 1910 | 2370 | 2940 |
| 2000 | 2480 | 3080 | 3820 | 4740 | 5880 |
| 3000 | 3720 | 4620 | 5730 | 7110 | 8820 |
| 5000 | 6200 | 7700 | 9550 | 11850 | 13700 |
| 10000 | 12400 | 15400 | 19100 | 23700 | 27400 |

YOUR INVESTMENT BECOMES DOUBLE IN JUST 38 MONTHS

### (III) CHITTUKKURUVVI RECURRING DEPOSIT SCHEME

**Maturity value at the end of**

| Per Month | 12 Months | 24 Months | 36 Months | 48 Months |
|---|---|---|---|---|
| 250 | 3400 | 7500 | 12330 | 17880 |
| 500 | 6800 | 15000 | 24660 | 35760 |
| 750 | 10200 | 22500 | 36990 | 53640 |
| 1000 | 13600 | 30000 | 49320 | 71520 |

* Pensioners will get 1% Extra Interest.
* Post dated cheques will be issued at the time of deposit for interest as well as Principal amount.







For further details, contact:
**Surya Estate Finance**
No. 12, Venkatesan Street, T.Nagar,
Madras – 600 017. Phone: 446954

JOHN


• ஜெ அரசு மீது...


• ...குற்றச்சாட்டுக்கள்

# கம்ப்யூட்டர் வடிவமைக்கக் குற்றவாளிகளைப் பிடிக்க முடியுமா?

● எஸ். முகமது மீரான், சென்னை.

*? அத்தியாவசியமான நிலக்கரி பூதாகாரமான பிரச்னையாக விசுவரூபம் எடுத்துள்ளதே?*

! வாழப்பாடியும் ரங்கராஜன் குமாரமங்கலமும் சுமத்தியுள்ள குற்றச்சாட்டுக்களில் அரைக்கால்வாசி உண்மை என்று நிரூபணமானாலும் 'ஜெ' அரசு டிஸ்மிஸ் ஆக வேண்டியதே. நிலக்கரி வாங்குவதில் விதிமுறைகள் சரியாகப் பின்பற்றப்படவில்லை. ஓரிருவருக்குச் சலுகை காட்டப்பட்டுள்ளது என்பதால் லஞ்சஊழல் பயங்கரமாக விளையாடியிருக்கிறது என்று ஊகிக்க இடமுண்டு - இவை குற்றச்சாட்டுக்கள். நீதிமன்றம் இடைக் காலத் தடை பிறப்பித்துள்ளது. வழக்கு நீதி மன்றம் போய் விட்டதால் இனி இழுபறிதான்.

● மா. பழனிச்சாமி, கோவை.

*? ராணிப்பேட்டை, பழனி தொகுதிகளில் மத்திய போலீஸ் படை ஈடுபடப் போவது உறுதியாகி விட்டதே?*

! இது சேஷனுக்கு வெற்றி. தேதியும் குறித்து விட்டார். ஆனால் ஜனநாயகத்துக்குத் தோல்வியே. பட்டாளம் இல்லாவிட்டால் தேர்தல் நியாயமான முறையில் நடக்காது என்பது நமது சமுதாயத்துக்கே இழுக்கு. பட்டாளம் குவிவதால் மக்கள் அச்சமின்றி வோட்டுப் போட முன்வருவது சந்தேகம்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? ''வாழைப் பூ மணக்காது; வாழப்பாடி கனவு பலிக்காது'' என்று கு.ப. கிருஷ்ணன் கூறியிருப்பது பற்றி?*

! இன்னொரு காளிமுத்துவா? அவருக்கு ஏற்பட்ட கதி இவருக்கும் ஏற்படாமல் இருந்தால் சரி!

● முத்து ஆனந்த், வேலூர்.

*? காதலிப்பது, காதலிக்கப்படுவது - இரண்டில் எது சுகம்?*

! இரண்டுமே வேதனைதான். ஒருவரைக் காதலித்து, அவராலேயே காதலிக்கப்படுவதுதான் சுகம்.

● ஏ. சண்முகசுந்தரம், சென்னை.

*? 'இலஞ்சத்தையும் அரசியலையும் பிரிக்க ஒரு மசோதா கொண்டு வரப்படுமா?' என்று கேட்டிருக்கிறாரே, ஒரு கம்யூனிஸ்ட் எம்.பி.?*

! என்னங்க இவரு, அடி மடியிலேயே கை வைக்கிறாரு!


• காளிமுத்து?


• முக்கியத்துவம்

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? எப்போது கொந்தளிப்பீர்கள்?*

! ஒரு பெண் எப்படியெல்லாம் அடக்க ஒடுக்கமாய் இருக்கிறாள் என்று விக ஆபாசமாக வர்ணிக்கும் போது.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? வி.பி. சிங் வனவாசம் செல்லப் போவதாக அறிவித்துள்ளாரே?*

! மாப்பிள்ளைகள் கூடத்தான் முகூர்த்தத்துக்கு முன்னால் காசியாத்திரை போகிறார்கள்!

• வெற்றி!



● மகா. பால சுப்பிரமணியம், அம்பனூர்.

*? கலை உலகில் ரஜினிகாந்துக்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் தரப்படுகிறது?*


● காசி யாத்திரை


● ''முதலிடம்!''


● ஆபாச வர்ணனை

! கலையுலகில் அவரது பாக்ஸ் ஆஃபீஸ் வெற்றி முக்கியத்துவம் பெறுகிறது. அவரிடம் உள்ள மாபெரும் ரசிகர் கும்பல் அரசியல் உலகில் அச்சத்தை ஏற்படுத்துகிறது.

● சுகாராஜ், செல்லூர்.

*? ''தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதில் நமக்கே முதலிடம்'' என நாவலர் கூறுவது பற்றி?*

! பிறரை ஏமாற்றுவதில் அரசியல் வாதிக்கே முதலிடம்.

● எஸ். சந்திரா, மதுரை.

*? குடிநீர்ப் பிரச்னையைப் போர்க்கால அடிப்படையில் சமாளிப்பது என்றால் என்ன?*

! தண்ணீர் டாங்கர்களை யுத்த டாங்குகளாகவும், மேகங்களில் 'விதையிட்டு' செயற்கை மழை பொழியச் செய்யச் செல்லும் விமானங்களைப் போர் விமானங்களாகவும் எண்ணி விடாதீர்கள். போர் என்று வந்தால் காண்பிக்கப்படும் சுறுசுறுப்பு, கடமை உணர்வு, தேசபக்தி, தன்னலம் கருதாமை, திட்டமிட்டுச் செயலாற்றுதல் முதலியன கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்பதே பொருள்.

● சிவராம சுப்பிரமணியன், தூத்துக்குடி.

*? கம்ப்யூட்டர் மூலம் வடிவமைத்து குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பது சாத்தியமா?*

! சாத்தியம்தான். ஆனால் வெற்றி - தோல்வி, கம்ப்யூட்டருக்கு வழங்கப்படும் தகவல்களைப் பொருத்துள்ளது. தவறான, குழப்பமான தகவல்கள் தவறான வடிவமைப்பையே தரும்.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? ''கல்கி இதழில் பதிலளிக்கும் தாராக, புதிய பெண் ஆசிரியரே'' என்று அம்பலம் கூறியிருப்பது உண்மையா?*

! ஒரு பத்திரிகையில் பிரசுரமாகிற விஷயங்கள் அனைத்துக்கும் அதன் ஆசிரியரே பொறுப்பு என்ற அளவில் மட்டுமே அம்பலம் அம்பலப்படுத்தியிருப்பது உண்மை.

● ஏ. இளங்கோவன், சேலம்.

*? ஐந்து புதிய சேனல்களிலும் ஹிந்தி நிகழ்ச்சிகளே ஒளிபரப்பாகும் எனில் அது ஹிந்தி திணிப்பு ஆகாதா?*

! இப்படி ஹிந்தியைத் திணிப்பதன் மூலம் ஒருமைப்பாட்டையும் திணித்து விடலாம் என்று எண்ணுவோர் எதிர்மறை விளைவே காண்பார்கள்.

● கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர். ❒

*? அரசியலிலிருந்து மதத்தைப் பிரிக்கும் மசோதா நிறைவேற்றப்பட்டால், எதிர்க் கட்சிகளை முடக்கத்தானே அதை மத்திய அரசு பயன்படுத்தும்?*

! நோக்கம் சரியானது; ஆனால் அதை நிறைவேற்ற தற்போது கொண்டு வரப்பட்ட மசோதாவில் பல குறைபாடுகள் உண்டு. பலத்த எதிர்ப்பு காரணமாக அது தாக்கலாவது ஒத்திப் போடப்பட்டுள்ளது. அடுத்து வரப் போகும் மாநிலத் தேர்தல்களைக் கருத்தில் கொண்டு காரியம் பண்ணாமல், நன்கு யோசித்து, நிதானமாக நல்லதொரு மசோதாவை உருவாக்குவது அவசியம். 'இருக்கின்ற சட்டங்களே போதும்' என்ற கருத்தை ஏற்க முடியவில்லை. அப்படி போதுமெனில் மதத்தின் பெயரால் இத்தனை அநீதிகள் தேர்தல் சமயத்தில் நம் கண்முன்னே நிகழாது.

● என். சண்முகம், திருவண்ணாமலை.

*? தமிழகத்தில் வன்முறைச் செயல்புரிவோரின் எண்ணிக்கை அதிகமாகி விட்டதே?*

! விசனிக்கத்தக்க உண்மை. ஆளும் கட்சியே வழிகாட்டுகிறது. மதுரை ரயில்நிலைய சம்பவம் ஓர் உதாரணம். தம் மீது நடந்த கொலை முயற்சி என்று வாழப்பாடி கூறுவது மிகைப்படுத்தலாக இருக்கலாம் என்றாலும் தாக்குதல் நடந்ததும் தொண்டர் மண்டை உடைந்ததும் மெய்தானே!

● ரா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

*? சமீபத்தில் தங்களை வியக்க வைத்த சம்பவம்?*

! 'மிலாதுன்நபி, விநாயகசதுர்த்தி ஊர்வலங்கள் வேண்டாம்' என்ற முதல்வரின் கோரிக்கையை இஸ்லாமிய சகோதரர் உடனடியாக ஏற்றது மகிழ்ச்சி தந்த வியப்பு. இந்து முன்னணி மறுத்தது வருத்தம் கலந்த வியப்பு.

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. ஆர். உபேந்திரன்,
44, கி. கோவில் 3 ஆம் தெரு,
தஞ்சாவூர் - 613 001.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

ஜலதோஷம் உங்கள் செல்ல மகளை படாதபாடு படுத்தும்போது
படிப்பு, விளையாட்டு எதிலுமே அவள் மனம் லயிக்காது.

# ஜலதோஷத்தைப் போக்குங்கள் ஜண்டு பாம் தடவுங்கள்.

விரைவில் துடிப்புடன் விளங்குங்கள்.



ஜலதோஷம் தனியாக வருவதில்லை. கூடவே வேறு சில உபாதைகளையும் அழைத்து வரும் – மூக்கடைப்பு,சுவாசிப்பதில் சிரமம். போன்றவை. இதில் கவலைப்பட ஏதுமில்லை.

வலியை நீக்கும் ஜண்டு பாமிலே ஆழமாக ஊடுருவி செயல்புரியும் விசேஷ மருந்துப் பொருட்கள் உள்ளன. இவை ஜலதோஷம் மற்றும் இதர உபாதைகளையும் இழுத்து வெளியேற்றி, உங்களுக்கு உடனடி நிவாரணம் அளிக்கின்றன.

வலியை நீக்கும் ஜண்டு பாமை எப்போதும் கைவசம் வைத்திருங்கள்.
இது தலைவலி மற்றும் உடம்புவலி போன்ற உபாதைகளிலிருந்தும்
விரைவில் நிவாரணமளிக்கிறது.

ஜண்டு பாம் ஜண்டு பாம் வலியை நீக்கும் பாம
ஜலதோஷம் தலைவலி நோவுகளையும்
நொடியில் நீக்கிடுமே

30, 10 மற்றும் 5 கிராம் பேக்கிலே.




பாம் ஒன்று
செயல்
மூன்று

1. ஜலதோஷம்
2. தலைவலி
3. உடம்பு வலி

AD PALACE/ZPW/142-92/TAM